# தனி வழி





அமுத நிலையம்

கி.வா. ஜகந்நாதன்

# தனி வெளி

[சொற்பொழிவுகள்]



கி. வா. ஜகந்நாதன்



அமுத நிலையம் லிமிடெட்
46 இராயப்பேட்டை ஹைரோடு
சென்னை-14

# முன்னுரை

இந்த ஆண்டு ஏப்ரல் மாதமும் ஜூன் மாதமும் இலங்கைக்குப் போயிருந்தேன். யாழ்ப்பாணத்திலும், கொழும்பு முதலிய பிற இடங்களிலும் பல சொற்பொழிவுகள் ஆற்றினேன். அங்குள்ள அன்பர்களின் முருக பக்தியை என்னென்று சொல்வது! யாழ்ப்பாணத்தில் எங்கே பார்த்தாலும் முருகன் கோயில்கள்; கந்தசாமி கோயில் என்றே அங்கே வழங்குகிறார்கள்.

இந்த வழக்கை அறிந்தபோதுதான் கந்தசாமி என்னும் திருநாமத்தின் பெருமையை நன்கு உணர்ந்தேன். வடமொழியில் ஸ்கந்த: என்று உள்ள சொல்லே தமிழில் கந்தன் என்று வந்தது. வடமொழியில் ஸ்கந்தோபநிஷத் ஸ்காந்த புராணம் என்று நூல்கள் இருக்கின்றன. தமிழிலும் முருகனுடைய வரலாற்றைச் சொல்லும் நூலுக்குக் கந்தபுராணம் என்று பெயர். முருகனுடைய அஷ்டோத்தரம் ஸ்கந்தாய நம: என்று தொடங்குகிறது.

இவை மட்டும் அன்று; முருகனுடைய திருவருளில் ஊறித் திளைத்து மற்றவர்களும் அதனைப் பெறவேண்டும் என்ற இணையற்ற கருணையினால் திருப்புகழ் முதலிய அற்புதமான நூல்களை வழங்கிய அருணகிரிநாத சுவாமிகள் கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி, கந்தர் அந்தாதி என்று தம்முடைய நூல்களுக்குப் பெயரிட்டிருக்கிறார்.

''வேலா யுதன்சங்கு சக்ரா யுதன்விரிஞ்
சன்அறியாச்
சூலா யுதன்தந்த கந்த சுவாமி''

என்று கந்தசுவாமி என்ற திருநாமத்தைக் கந்தர் அலங்காரத்தில் பதித்திருக்கிறார்.

இவற்ருல் கந்தசாமி என்ற திருநாமத்துக்குத் தனிச் சிறப்பு உண்டென்பது புலனுயிற்று. அந்த எண்ணம், யாழ்ப்பாணத்தில் எங்கு நோக்கினும் கந்தசாமி கோயில்கள் இருப்பதைக் கண்டும், அவற்றை வேறு விதமாகக் குறிக்காமல் கந்தசாமி கோயில் என்றே குறிப்பதைக் கேட்டும் வலி பெற்றது.

யாழ்ப்பாணத்துக்கு நான் செல்லும்போதெல்லாம் எனக்குத் தங்க இடம் அளித்து, உணவு வழங்கி, உபசாரம் செய்து என்னைத் தம் குடும்பத்தைச் சார்ந்த முதியவனுகவே எண்ணி நலம் செய்து வருகிறுர் நீர் வேலியில் உள்ள ஓர் அன்பர். அவர் குடும்பத்தினர் அனைவரும் காட்டும் அன்புக்கு அளவே இல்லை. அவர் பெயர் ஸ்ரீ இராசேந்திர குருக்கள். அவர் அந்த ஊரிலுள்ள ஸ்ரீகந்தசாமி கோயிலில் முருகனை முப்பொழுதும் திருமேனி தீண்டிப் பூசை செய்யும் அருளாளர். யாழ்ப்பாணம் என்றவுடன் நீர்வேலிக் கந்தசாமி கோயிலும், அங்கே பூசை செய்துவரும் குருக்கள் ஐயாவும் முதலில் என் நினைவுக்கு வருவதில் வியப்பு இல்லை. முதல் முதல் நான் இலங்கையில் கண்ட கந்தசாமி கோயில் அது.

இலங்கையன்பர்களுக்கு அருணகிரிநாதர் திருவாக்கில் மிகுதியான அன்பு. அலங்கார அநுபூதிப் பாடல்களுக்குப் பொருள் விரித்து உரைக்கும்போது தம்மையே மறந்து கேட்டு இன்புறுகிறுர்கள்.

இந்தக் கந்தர் அலங்காரச் சொற்பொழிவு வரிசைகளைப் படித்து இன்புற்று, அதனுல் என்னிடம் பேரன்பு பூண்ட

அன்பர்கள் பலர் இலங்கையில் இருக்கிறார்கள். பணம் அனுப்பிப் புத்தகம் வருவிக்கும் முறை இலங்கையில் செல்லாது. மிக்க முயற்சியின்மேல்தான் இந்த நாட்டி லிருந்து அங்கே புத்தகம் செல்லவேண்டும். அப்படியிருந்தும் பல இலங்கையன்பர்கள் இந்த அலங்கார வரிசை நூல்களை வாங்கிப் படித்து மகிழ்கிறார்கள் என்பதை அறிந்து, இவ்வா றெல்லாம் செய்விக்கும் முருகனுடைய திருவருளை இறைஞ்சு கின்றேன்.

தமிழ் நாட்டிலுள்ள முருகன் அடியார்கள் பலர் இந்த வரிசை விரைவில் நிறைவுற வேண்டுமென்று பேரார்வத் துடன் இருக்கிறார்கள் என்பதை அறிவேன். பலர் அடிக்கடி கடிதம் எழுதி வருகிறார்கள். முருகன் திருவருள் அவர்கள் அவாவை நிறைவேற்றிக் கொடுக்கும் என்றே நம்புகிறேன்.



இந்தப் புத்தகம் அலங்கார வரிசையில் 18-ஆவது புத்தகம். 95 முதல் 100-வது பாடல் வரையில் உள்ள ஆறு பாடல்களுக்கு இதில் விளக்கம் இருக்கிறது. பயனைச் சொல்லும் பாட்டு ஒன்றும், அதிகமாகக் காணப்படும் பாடல்கள் ஆறும் இன்னும் எஞ்சியுள்ளன. கந்தர் அலங்காரச் சொற்பொழிவுகள் தேனாம்பேட்டை முருகன் கோயிலில் நிகழ்ந்தபோது, இந்த நூறு பாடல்களுக்கும் விளக்கம் சொல்லி, அதிகப்பாடல்கள் ஆறுக்கும் தொடர்ந்து விளக்கம் கூறி, கடைசியில் பயனாக உள்ள பாடலுக்கு விரிவுரை கூறினேன். அந்த முறையைப் பின்பற்றியே, 18-ஆவது புத்தகத்தில் நூறாவது பாடலோடு நிறுத்தி, அடுத்த புத்தகத்தில் அதிகப் பாடல்கள் ஆறின் விரிவுரை யையும், பயனாக உள்ள பாடலின் விரிவுரையையும் வெளி யிடலாம் என்று நினைக்கிறேன்.

இருபதாவது புத்தகத்தில் கந்தர் அலங்காரப் பாடல் கள் எல்லாவற்றிலும் காணப்படும் சொல், பொருள்

முதலியவற்றைப் பற்றிய ஆராய்ச்சியைச் சிறிது விரிவாகவே எழுதலாம் என்று எண்ணியிருக்கிறேன். புத்தகம் முழுவதுமே ஆராய்ச்சியாக இருக்கும். முருகனுடைய புகழை அருணகிரியார் எடுத்துச் சொல்லும் முறை, அவனால் அவர் பெற்ற அநுபவங்களின் வகை, அவர் நமக்குக் கூறும் உபதேசங்கள், அவர் பாடல்களிலுள்ள சொல் நயம், அரிய கருத்துக்கள், அவருக்கே உரிய தனிமுறைகள், அவரிடம் உள்ள சிறப்பு இயல்புகள் ஆகிய பலவற்றை ஆராய்வதற்கு இடம் இருக்கிறது. முருகன் திருவருள் அந்த ஆராய்ச்சியையும் முற்றுவித்து இந்த அலங்கார வரிசையை நிறைவுறுத்தும் என்று நம்புகிறேன்.



இந்தப் பாடல்களில் முருகனை முன்னிலைப்படுத்திக் கூறும் பாடல்கள் இரண்டு (4,5); மயிலை முன்னிலையாக வைத்துப் பாடியது ஒன்று (2); படர்க்கைப் பரவலாக உள்ளவை மூன்று (1,3,6.)

முதல் பாட்டு, வேறுபாடற்ற உணர்வு வந்தால்தான் இறைவனுடைய அருளநுபவம் கிடைக்கும் என்பதைக் கூறுகிறது. மயிலின் பெருமையை இரு வேறு வகையில் அடுத்தடுத்து இரண்டு பாடல்கள் பாடுகின்றன. இரண்டு பாடல்கள் முருகனிடம் விண்ணப்பித்துக்கொள்ளும் உருவில் அமைந்துள்ளன. இறுதிப் பாடல் அவன் திருவருளால் பெற்ற நிரந்தர விடுதலையையும் அதற்குக் காரணமான அடியார் உறவையும் அழகாகச் சொல்கிறது.

அருணகிரியார் கூறும் அருளநுபவச் செய்திகள் மிகச் சிறப்புடையன. இதில் உள்ள முதற் பாட்டும் இறுதிப் பாட்டும் அதைச் சொல்கின்றன. யான், தான் என்று வேறுபாடு கண்டு உரைக்கும் நிலையொழிந்து மோன நிலை பெற்றால் சான்று ஆரும் அற்ற தனி வெளியில் முருகனோடு ஒன்றி இன்புறலாம் என்று முதற்பாட்டுச் சொல்கிறது.

இடம் கடந்த அந்த இடத்தையும் அநுபவத்தையும், ''முருகன் க்ருபாகரன் சான்று ஆரும் அற்ற தனிவெளிக்கே வந்து சந்திப்பது'' என்று சொல்கிறுர். இறுதிப்பாடல் ஜீவன் முக்த நிலையைச் சொல்கிறது. இறைவனுடைய அடியார் களோடு இணங்குவதனுல் இருவினைப் பற்று அற, சரீர அபிமானம் நீங்க, என்றும் பிறவியே இல்லாத நிலையை முருகன் அருள் செய்தான் என்று அப்பாடல் கூறுகிறது. கந்தர் அலங்காரத்தின் இறுதிப் பாடலாகிய அது நிறை வைக் கூறுவதாக இருக்கிறது.

க்ருபாகரன், கந்தன், கொற்ற வேள், செங்கோடை வெற்பன், பெருநிலம் சூகரமாய்க் கீன்ருன் மருகன், மயில் வாகனன், முருகன், வேல்முருகன், வேலோன் என்னும் திருநாமங்கள் இந்த ஆறுபாடல்களில் வருகின்றன. முருகன் கிரௌஞ்ச மலையை அட்ட பராக்கிரமச் செயலை ஒரு பாடலில் காண்கிருேம்.

முருகனுடைய வாகனமாகிய மயிலின் பெருமையைத் தனியே கூறிப் போற்றுவது அருணகிரிநாதர் வழக்கம். இங்கே இரண்டு பாடல்கள் அதன் பெருமையை எடுத் துரைக்கின்றன. ஒரு பாட்டு மயிலையே முன்னிலைப்படுத்திப் பாடியது. மற்ருென்று படர்க்கையில் வைத்துப் பாடியது. ஒன்று, அது சுதந்தரமாய் இட எல்லை கடந்து நிற்பதை விரிக்கிறது. மற்ருென்று, ஆதிசேடன் அதனுல் படும் பாட் டை ஒரு கற்பனைக் காட்சியாக அமைத்துச் சொல்கிறது. தடக்கொற்ற வேள் மயில், செழுங்கலபி என்று இந்தப் பாடல்களில் அதனைப் பாராட்டுவதன்றி, வேறு ஒரு பாட்டில், 'தூவிக் குலமயில்' என்று சிறப்பிக்கிருர்.

திருமாலினுடைய வராகாவதாரச் சிறப்பை ஒரு பாட்டில் பார்க்கிருேம். 'தொல்லைப் பெருநிலம் சூகரமாய்க் கீன்ருனு'க அங்கே வருகிருர். 'காசினியைப் பாலிக்கும் மாயன்' என்று ஓரிடத்தில் அறிமுகப்படுத்துகிருர். அவருக்குப் பாயலாக

உள்ள அனந்தனையும், அவர் திருக்கரத்தில் படைகளாக உள்ள சங்கு சக்கரத்தையும் காண்கிறோம்.

உவமையாகவும் உருவகமாகவும் சிலவற்றை எடுத்தாண்டு கருத்துக்களைச் சுவைபட விளக்குகிறார் அருணகிரியார். ஒரு நாளைக்கு ஒரு நாள் மாறிக்கொண்டே வரும் இந்தப் பொய் வாழ்வை, ''நதிதனையன்ன பொய்வாழ்வு'' என்று உவமிக்கிறார். முருகன் திருவடியைக் கமலக்கழல் என்று பாடுவது புதியதன்று. துணையில்லாமல் வாடும் நிலைக்குக் கொழுகொம்பு இல்லாமல் வாடும் தனிக்கொடியின் நிலையை உவமையாக்குகிறார்; ''தாவிப் படரக் கொழுகொம்பிலாத தனிக்கொடிபோல், பாவித் தனிமனம் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே'' என்று கூறுகிறார்.

இந்த உடம்பை நரம்பாற் பொதிந்த பொதி என்று உருவகம் செய்கிறார். உடலைச் சிறையாகவும், பாசவினையை விலங்காகவும் சொல்லுகிறார்.

''கதிதனை ஒன்றையும் காண்கின்றி லேன்கந்த
வேல்முருகா
நதிதனை யன்னபொய் வாழ்வில்அன் பாய்நரம்
பாற்பொதிந்த
பொதிதனை யும்கொண்டு திண்டாடு மாறெனைப்
போதவிட்ட
விதிதனை நொந்துநொந் திங்கேயென் றன்மனம்
வேகின்றதே''

என்ற பாட்டு, மாணிக்கவாசகர் பாடல் ஒன்றை நினைப்பூட்டுகிறது.

செழுக்கமலத் திரளனநின் சேவடிசேர்ந் தமைந்த
பழுத்தமனத் தடியருடன் போயினர்யான்,
பாவியேன்

புழுக்கஞுடைப் புன்குரம்பைப் பொல்லாக்கல்வி
ஞானமிலா
அழுக்குமனத் தடியேன் உடையாய்நின்
அடைக்கலமே.''

பெரும் பொருள் பெற்றவர்களும், ''கோடி கோடி யாகப் பணம் படைத்துக் குபேரர்களைப் போல வாழ்கிற வர்கள் இருக்கிருர்களே! அப்படி எங்களுக்குக் கிடைக்கவில் லேயே!'' என்று சொல்வது உலக இயல்பு. அருள் பெற்றவர் களுக்குக்கூட இத்தகைய ஆராமை இருக்கும் போலும்!

இந்த ஆறு பாடல்களில் முதல் பாடலுக்கு உரை காணும்போது, ''யான், தான் எனும் சொல் இரண்டும் கெட்டால் அன்றி'' என்ற தொடர் முதலில் சிறிது மயக் கத்தை உண்டாக்கியது. தான் என்பது அவன் என்னும் பொருளுடையது; அது இறைவனைச் சுட்டியது. யான் என்றது உயிரைச் சுட்டியது. 'உயிரும் இறைவனும் ஒருங்கே கெடுவதாவது!' என்று ஒரு மயக்கம் தோன்றியது. அப்பால் 'யான் தான் எனும் சொல்' என்பதில் வரும் 'சொல்' என்னும் சொல்லில் அழுத்தம் இருப்பதை உணர்ந்தேன். யான், தான் என்று சொல்லும் நிலையை இழந்து சொல்லி றந்து நிற்கும் மோன அநுபவத்தைச் சுட்டுவதாகத் தெளிந் தேன். இப்படித் தெளிவதற்கு உறுதுணையாக இருந்தது கந்தர் அநுபூதியில் வரும் பாட்டு ஒன்று.

''யாஞகிய என்னை விழுங்கி வெறும்
தாஞய் நிலைநின்றது தற்பரமே''

என்ற அற்புதப் பாட்டே அது.

முதல் பாட்டில் 'கீன்ருன்' என்ற சொல்லை ஆண்டிருக் கிருர். கீன் என்பதன் அடியாகப் பிறந்த கீண்டான் என்ற சொல்லே பயில வழங்குவது. அங்கே எதுகையை நோக்கிக் கீன்ருன் என்றே பாடுகிருர். இப்படி அருணகிரிநாதர் படைத்துத் தந்த சொற்கள் வேறு பல உண்டு.



வழக்கம்போல் இந்தப் புத்தகம் வெளி வருவதற்குப் பேருதவி செய்தவர் அன்பர் சிரஞ்சீவி அனந்தன். சில சமயங்களில் ஒரு முறைக்கு இருமுறை தட்டெழுத்தில் பிரதி செய்து தரும் பணியை அவர் புரிந்திருக்கிறார். தெய்வ பக்தியும், தமிழார்வமும், தொண்டு மனப்பான்மையும், பண்பும் உடைய அவருக்கு முருகன் திருவருளால் எல்லா நலன்களும் நிரம்ப வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

'காந்தமலை'
சென்னை-28

கி. வா. ஜகந்நாதன்
15—9—62

# உள்ளுறை

# தனி வெளி

இளம் பருவத்தில் ஒரு மனிதன் கல்வி கற்கிறான்; பல உறவினர்களோடு பழகுகிறான்; பொருளைச் சேர்த்துக் கொள்கிறான்; பிற்காலத்து வாழ்க்கைக்கு ஏற்ற வகையில் அவன் கல்வி, செல்வம், ஆற்றல் முதலியவற்றைச் சேகரித்துக் கொள்கிறான். அந்த இளம் பருவத்திற்கும், பின்னாலே வருகிற பருவங்களுக்கும் தொடர்ச்சி இருக்க வேண்டும். ஒரு பருவத்திற்கும், மற்றொரு பருவத்திற்கும் தொடர்ச்சி இல்லாவிட்டால் அவனுடைய வாழ்க்கை நன்கு அமையாது. கண்ட கண்ட இடங்களில், கண்ட கண்டபடி யெல்லாம் வாழ்கிறவர்களுக்கு நிலையான வாழ்க்கை இல்லை. வாழ்வில் பிற்காலம் நன்றாக அமைய வேண்டுமென்ற எண்ணத்தோடு, அறிவு வந்தது முதல் எவன் திட்டவட்டமாகத் தன்னுடைய செயல்களை வரையறை செய்துகொண்டு அதற்கேற்ற பயிற்சியை அமைத்துக் கொள்கிறானோ, அவன்தான் நன்கு வாழ முடியும். பிற்காலத்து வாழ்வுக்கு ஏற்ற திட்டங்களை வகுத்துக்கொள்கிறவர்கள் அந்த வாழ்க்கையின் பயன் இன்னது என்று முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். அதைத்தான் லட்சியம் என்றும் குறிக்கோள் என்றும் சொல்வார்கள். குறிக்கோளைப் பற்றிச் சென்ற பாட்டில் நாம் பார்த்தோம்.

### வாழ்க்கையின் தொடர்ச்சி

இந்த வாழ்க்கையின் முடிவு எத்தகையது என்று நமக்கு ஓரளவு தெரியும். மரணத்தில் முடிகிறது இந்த

வாழ்வு. நன்றாக வாழவேண்டுமென்ற ஆசை எல்லோருக்கும் இருக்கிறது. இளம் பருவத்தில் முயற்சி செய்கிறவன் அதனுடைய பயனைப் பின் பருவத்தில் பெறுகிறான். முன் பயிற்சி செய்த மனம் பின்னாலே தொடர்ந்து வருகிறது. என்ன என்ன வகையான பயிற்சி அவனுக்குக் கிடைக்கிறதோ, யார் யார் உறவு அவனுக்கு உண்டாகிறதோ அவற்றிற்கு ஏற்றபடி அவன் வாழ்வு ஆரம்பிக்கிறது. இது ஒரு பிறவியில் அமைகிறது.

இது போலவே இந்த வாழ்க்கையில் நாம் ஈட்டிக் கொள்ளும் பண்புகள் இந்த வாழ்க்கைக்குப் பிறகும் தொடர்ந்துவரும். சின்னஞ்சிறு பிராயத்திலுள்ள உடம்பு இப்போது நமக்கு இருப்பது இல்லை, அது வளர்ந்தோ, குறைபட்டோ அமைகிறது. ஆனாலும் மன இயல்பு மாறுவது இல்லை. அது போல் இந்தச் சரீரம் போய் வேறு ஒரு சரீரம் மற்றொரு பிறவியில் கிடைத்தாலும், இப்போதுள்ள வாழ்வின் அம்சங்கள் அந்தப் பிறவியிலும் தொடர்ந்து வரும். அவற்றின் தொகுதியை வாசனை என்று சொல்வார்கள். மனத்தைப் பண்படுத்திச் சிறந்த வகையில் அமைத்துக்கொண்டவன் அடுத்த பிறவியிலும் அந்த மனம் தொடர்வதால் இங்கே பாடுபட்டதன் விளைவை அந்தப் பிறவியிலும் பெறலாம்.

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து"

என்று திருவள்ளுவர் சொல்வார். ஆகையால் மனத்தோடு சம்பந்தப்பட்ட முயற்சிகள் பிறவிதோறும் தொடர்ந்து வரும் என்பது ஓர் உண்மை, இந்த நாட்டில் அதனைப் பலவகையில் வற்புறுத்தியிருக்கிறார்கள். முன்னைப் பிறவியில் செய்த புண்ணிய பாவங்களின் பயன் அடுத்த பிறவியிலும் வரும் என்றும், முன் பிறவிகளில் காதல் செய்தவர்கள் பின்பும் காதல் செய்யும் வாய்ப்புப் பெறுவார்கள் என்றும், முன் பிறவியில் கொண்ட ஆசை பின் பிறவிக்கு

ஏதுவாகும் என்றும் நூல்கள் சொல்லுகின்றன. உடம்பு வாழ்வு இந்நப் பிறவியோடு நின்ருலும் உயிர் வாழ்வு தொடர்ந்து வருகின்றது என்பதைக் காட்டும் ஆதாரங்கள் இவை.

உடம்பின் அளவிற்கு மாத்திரம் சாரும் செய்கையைச் செய்கிறவனுக்கு இந்த உடம்பு போனல் அந்த முயற்சி யினுல் வருகிற பலன் இல்லையாகிவிடும். விரலில் மோதிரம் போட்டுக்கொள்கிருன் ஒருவன். அவனுக்கு அந்த விரல் போய்விட்டால் மோதிரத்தினுல் பயன் இல்லை. அதுபோல் உடம்பு சம்பந்தமாக மட்டும் செய்கிற முயற்சிகள் இந்த உடம்பு போய்விட்டால் பயனைத் தருவது இல்லை. ஆனுல் முயற்சியின் பயன் உள்ளத்தோடு சார்ந்திருக்குமானுல் அடுத்த பிறவிகளில் வந்து பயனைத் தரும். உடம்பு வாழ்வு வேறு; உள்ள வாழ்வு வேறு; உயிர் வாழ்வு வேறு. உயிர் வாழ்வு எப்போதும் இருக்கிறது; உள்ள வாழ்வு பல பிறவி களில் தொடர்ந்து வருகிறது; உடம்பின் வாழ்வு ஒரு பிறவி யோடு நின்று விடுகிறது.

## இப்போதே வீடு

அறம், பொருள், இன்பம், வீடு என்கின்ற நாலு உறுதிப் பொருள்களில் வீடு என்பது உயிர் அடையும் இன்பம். வீட்டு நெறியிலே செல்வது உயிரை ஒட்டிய முயற்சி. வீட்டு நெறி வாழ்க்கை உடம்பையும் உள்ளத்தையும் பயன் படுத்திக்கொண்டு உயிருக்கும் நலம் தரும் வாழ்க்கை; ''என்ருே, எப்பொழுதோ வீடு கிடைக்கப் போகிறது' அதைப்பற்றி இப்போது என்ன பேச்சு?'' என்று யாரும் இந்த நாட்டில் இருப்பது வழக்கம் இல்லை, மூக்சு விடுவது முதல் தூங்குகிற வரைக்கும் எல்லாமே வீட்டை லட்சிய மாகக் கொண்டு அமையவேண்டும் என்பது பெரியோர் கொள்கை. ஆகவே, இந்த வாழ்வில் நாம் அடைகின்ற இன்பங்களைக் கண்டு அதோடு நின்று விடாமல் இப்போது

உண்டாகும் துன்பங்களை மாற்றுவதற்கும், மேலும் இன்பத்தை வளர்ப்பதற்கும் நிலையான காரியங்களைச் செய்ய வேண்டும். வாழ்வு தொடர்ந்து வரும் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டு, நல்ல காரியங்களை இந்த வாழ்வில் செய்யவேண்டுமென்று நூல்கள் கூறும். ''அவற்றின் பயன் இந்த வாழ்வில் கிடைக்கவில்லையே! அடுத்த பிறவியில் கிடைக்கும் என்பது என்ன நிச்சயம்?'' என்ற சந்தேகப் பேர்வழிகளுக்கு இந்த உண்மைகள் புலனாகா. நான் ஓய்வு பெற்ற பிறகு நலம் பெறவேண்டு மென்று சேமிப்புச் செய்கிறான். இதைப் போலத்தான் அடுத்த பிறவிகளுக்கு வேண்டுமென்று இப்போதே ஏற்பாடு செய்ய வேண்டும்.

இந்தப் பிறவியிலேயே வீட்டு இன்பத்தைப் பெறமுடியுமா? நாளடைவில் உயிர் தூய்மை பெற்று இறைவனோடு ஒன்றித் திருவருளைப் பெறுகிறது. மனிதனாகப் பிறந்த உயிர் இந்த ஒரு பிறவியினாலேயே அடையவேண்டிய முழு இன்பத்தையும் அடைந்து விடலாம் என்பது ஓர் உண்மை. இதையும்விட மிகவும் பெரிய உண்மை, இந்த உடம்பு இருக்கும் போது இந்த வாழ்விலேயே நாம் பெறவேண்டிய முழு இன்பத்தையும் பெற்றுவிடலாம் என்பது. இந்த நாட்டிலுள்ள பெரியவர்கள் இந்த உண்மையை வற்புறுத்தியிருக்கிறார்கள். இறைவனுடைய திருவருளைப் பெற்றவர்கள், செத்தபிறகு சிவலோகம், வைகுந்தம் சேருவது என்பது மட்டும் அல்ல; இம்மை வாழ்விலேயே அதனுடைய சுவையைப் பெறலாம் என்பது சுருதி யுக்தி அநுபவங்களால் பெரியவர்கள் காட்டி யிருக்கிறார்கள். இந்த உலகத்தில் வாழும்போது முக்திஇன்பத்தை நுகர்கிறவர்கள் சீவன்முக்தர்கள் என்று பெயர் பெறுவார்கள்.

சங்க காலத்திலேயே இப்படி ஒரு வாழ்க்கையைப் பற்றிய சிந்தனை மக்களுக்கு இருந்தது.

''தவம்செய் மாக்கள் தம்உடம்பு இடாஅது
அதன்பயம் எய்திய அளவை மான''

என்று பத்துப் பாட்டில் வருகிறது. ''தவம் செய்கின்ற பெரியவர்கள் தம்முடைய உடம்பை விட்டுவிட்டு இறப்பதற்கு முன்னாலே தவத்தின் பயனாகிய சீவன் முத்த நிலையை அடைந்தது போல'' என்பது இதனுடைய கருத்து. ஆகையால் இந்த உடம்பு இருக்கும்போதே இறை அருள் இன்பத்தைப் பெறலாம் என்ற உண்மை அந்தப் பழங் காலத்து மக்களுக்கே புலனாகியிருந்தது என்று தெரிய வருகிறது. தாயுமானவர்,

''இத்தேகமொடு காண்பனோ''

என்று சொல்வார்.

''சென்றாங் கின்பத் துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே அப்போதே வீடு''

என்று நம்மாழ்வார் பாடுகிறார். இத்தகைய சீவன் முத்த நிலையை அடைவது எளிது அன்று. ஆனால் சாத்தியம். உபநிடதங்களும், சமய நூல்களும் இந்த நிலை மனிதனாலே அடைவதற்குரியது என்று சொல்கின்றன. அடைந்தவர்களும் தம்முடைய அநுபவத்தை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அப்படி அடைந்தவர்களில் ஒருவர் அருணகிரிநாதர்.

## அருணகிரியார் அறிவுரை

அவருடைய திருப்பாடல்களில் நம்மைப் போன்ற மக்களுக்கு அறிவுரை கூறும் பாடல்கள் பல. நம்முடைய துன்ப அநுபவங்களைத் தம்முடையனவாக மேற்கொண்டு இறைவனிடம் விண்ணப்பம் செய்துகொள்வன பல. அவற்றையெல்லாம் நாம் கூடச் சொல்லிவிடலாமே என்று தோன்றும். ஆனால் ஆண்டவனின் திருவருள் அநுபவத்தைப் பற்றி அவர் சொல்கிற இடங்கள் அவருடைய உயர்வையும், சிறப்பையும் காட்டுகின்றன. சென்ற பாட்டில் தம்முடைய நெஞ்சைப் பார்த்து, ''மாதர் மயலில் அகப்பட்

டாயே!'' என்று இரங்குவது போலப் பாடிய பெரியார் இப்போது நமக்கு உபதேசிக்கிருர். உலகத்தில் இருக்கும் போதே இறைவனுடைய அருள் இன்ப அநுபவத்தைப் பெறுவதற்கு எது வழி என்று சொல்கிருர்.

## சிறிது நேரக் கிளுகிளுப்பு

சில சமயங்களில் நமக்கு இறைவனுடைய நினைவு வரும்போது ஒருவகைக் கிளுகிளுப்பு உண்டாகிறது. உபநிடதங்களைப் பற்றி ஒருவர் பேசுகிருர்; மிக உயர்ந்த நிலையில் பல தத்துவத்தை எடுத்துச் சொல்கிருர். 'சுகதுக்கங்கள் இல்லாத நிலையே முத்தி. அந்த நிலையில் வெப்பம் இல்லை; குளிர்ச்சி இல்லை. காற்று இல்லை; ஆகாசம் இல்லை. பேச்சும் இல்லை; நினைப்பும் இல்லை. உடம்பினுல் வருகிற இன்ப துன்பம் இல்லை. நாமே இல்லை. காலமும், இடமும் நின்றுவிடுகிற இடம் அது' என்று வரிசையாக வருணிக்கிருர். அவற்றை நாம் கேட்கும்போது உலகத்தில் உள்ள நினைவு மாறி எங்கேயோ போய் நிற்பது போன்ற ஓர் உணர்ச்சி தோன்றுகிறது. உடம்பு கனத்தை இழந்து மேலே பறப்பது போன்ற உணர்ச்சியும் உண்டாகிறது. ஆனுல் அதைக் கேட்டுவிட்டு வெளிவந்து பழையபடி பிரபஞ்சச் சேற்றில் உழலும்போது நாம் பழையபடி ஆகிவிடுகிரேம். நீராடும்போது உடம்பு குளிர்ந்து பின்பு வெளியில் வந்தால் மறுபடியும் பழைய புழுக்கத்தை அப்பிக்கொள்வது போல நம்முடைய இயல்பான நிலை நம்மை வந்து சூழ்ந்து கொள்கிறது.

அந்த உயர்ந்த உண்மைகளைக் கேட்கும்போது ஓரளவு நமக்குப் புரிகிறது போல இருக்கிறது. சில சமயங்களில் பக்தர்கள் பஜனை செய்யும்போதும் இறைவனுடைய பெருங் கருணையைப் பற்றிச் சொல்லும்போதும் நம்முடைய உள்ளம் நெகிழும். மேலும் மேலும் அத்தகைய சங்கத்தில் சாரவேண்டுமென்ற ஆர்வம் எழும். ஆனுல்

அந்தச் சங்கத்தினின்றும் பிரிந்து போனல் பழைய குருடி கதவைத் திறடி என்ற கதையாகி விடுகிறது.

அவ்வாறு உண்டாவதற்குக் காரணம் என்ன? நம் மிடத்தில் நல்ல இயல்பு ஒன்றும், கெட்ட இயல்பு ஒன்றும் இருக்கின்றன. நல்லவற்றை ஒருவர் சொல்லும் போது கேட்கத் தெரிகிறது. ஓரளவு விளங்குவது போலவும் இருக்கிறது. அத்தகைய அநுபவங்களை நம்முடைய முயற்சியே இல்லாமல் பிறர் நம்மிடம் சார்த்தினல் பெறுவதற்குச் சித்தமாக இருக்கிறேம். நாமாக முயன்று அதைப் பெறுவது இல்லை. பிறர் விளைவித்துத் தருகிற காய் கறிகளை நாம் பெற்று உண்பதற்குத் தயாராய் இருக்கிறேம். ஆனல் நாமே உழுது, உரம் போட்டு, செடிகொடிகளைப் பயிர் பண்ணி, பொறுமையாகக் காத்திருந்து அந்த முயற்சியால் வரும் பலனைப் பெற்று வாழ விரும்புவதில்லை.

## நல்லோர் கூட்டுறவு

பஜனை செய்கிறவர்களும், உயர்ந்த உண்மைகளை உபதேசிக்கின்ற பெரியவர்களும் உண்மையிலேயே சிறந்த பாகவதர்களாகவும், பக்தர்களாகவும் இருந்தால் அவர்களைச் சாரும்போது நமக்குக் கிளுகிளுப்பு உண்டாகிறது. அதற்குக் காரணம் நம்முடைய மனம் ஓரளவு அவற்றைப் புரிந்து கொள்கிற பக்குவத்தில் இருப்பது. அதைவிடப் பெரிய காரணம் அந்தப் பாகவதர்களும், பெரியவர்களும் பலகாலமாக முயற்சி பண்ணி, சாதனையை ஓரளவு பெற்று, பின்பு தம்மைச் சார்ந்தவர்களிடமும் ஒருவகை உணர்ச்சியை உண்டாக்கும் ஆற்றலைப் பெற்றிருப்பதுதான். நாம் அவர்களைச் சார்ந்து சில மணி நேரம் ஒருவகையான கிளுகிளுப்புக்கு ஆளாகிறேம். அது நம்முடைய மனக் கவலையைப் போக்கி அமைதியான நிலையை உண்டாக்குகிறது என்பதை உணர்ந்துகொள்கிறேம். அத்தகைய பெரியவர்களுடைய சங்கத்திற் பழகியதற்குப் பயன் அப்போ

தைக்கு ஒருவகைக் கிளுகிளுப்பைக் கொள்ளுவது என்று நிற்கக் கூடாது. அது நீண்டு நிலைக்க வேண்டுமென்றும், அவர்களோடு சாராமலே நமக்கு அத்தகைய உணர்ச்சி எழ வேண்டு மென்றும், நாளடைவில் நம்மைச் சார்ந்தவர்களுக்கும் அத்தகைய உணர்ச்சியை உண்டாக்க வேண்டுமென்றும் நாம் ஆசைப்படவேண்டும். அந்த ஆசை முறுக முறுக அதற்கேற்ற முயற்சி நம்மிடம் உண்டாகும். சாதனை வலுப்பெறும். சோதனைகளுக்கிடையே நம் சாதனை வெற்றி பெற்று முடிவில் அநுபவ உலகத்தில் அடி எடுத்து வைப்போம்.

இப்படி அமைதியாக வாழ்வதற்கு ஒரு வழி உண்டென்று, பெரியவர்களிடம் பழகுவதால் தெரிந்துகொள்ள வேண்டும். எப்போதும் கவலைப்படவும், பிறனுடைய உயர்வைக் கண்டு பொறுமைப்படவும், பிறனுடைய துயரைக் கண்டு இரங்காமல் இருக்கவும் நாம் பழகிக் கொண்டிருக்கிறோம். இதற்கு நேர்மாறாக, உலகம் எல்லாம் இறைவன் படைப்பு என்றும், சுகதுக்கங்கள் நம்முடைய மனம் காரணமாக வருவன என்றும் எண்ணி, நம்முடைய மனத்தை நடுநிலையில் வைத்துக்கொள்வதற்கு மெல்ல மெல்லப் பழகிக்கொள்ள வேண்டும். அந்தப் பழக்கம் எளிதில் வராது. பெரியவர்களுடைய சங்கத்தினால் அப்படி ஒன்று இருப்பதை முதலில் தெரிந்துகொண்டு, அதனால் நன்மை உண்டாகும் என்பதைத் தெளிந்து கொண்டு முயன்றால் அது நமக்கும் கிடைக்கும். நமக்கும் கிடைக்கும் என்ற நம்பிக்கையை முன்னால் பெற்றுப் பின்பு முயல வேண்டும். இதற்குத்தான் அடிக்கடி நல்லவர்களுடைய கூட்டுறவை வைத்துக்கொள்ள வேண்டும் என்று நூல்கள் கூறுகின்றன.

## பருவத்துக்கு முன்னும் பின்னும்

ஒரு சிறுமி, தனக்கு மங்கைப் பருவம் வராவிட்டாலும் பருவம் வந்த பெண்கள் தங்கள் தங்கள் கணவர்களோடு

பழகுவதைக் கண்டு, தனக்கும் அப்படி ஒரு நிலே வேண்டு மென்று ஆசைப்படுகிருள். பெண்களோடு சேர்ந்து பெண் களுக்கு உரிய விஷயங்களே எல்லாம் கற்றுக்கொள்கிருள். பாடுவதும், ஆடுவதும், சமையல் செய்வதும், குழந்தை களேப் பராமரிப்பதும் ஆகிய காரியங்களேப் பருவம் வராமல் உள்ள பெண்கள்கூடக் கற்றுக்கொள்கிருர்கள். இவற்றை யெல்லாம் கற்றுக்கொண்டு, இல்வாழ்க்கைக்குரிய தகுதி களேயெல்லாம் பெற்றுப் பிறகு தனக்கென்று ஒரு கணவனே அடைகிருள். பருவம் வந்த பிறகு அவனுல் அடைகிற இன்பத்தைப் பெறுகிருள். சமையல் செய்வதும், குழந்தை களேக் காப்பாற்றுவதும், வீட்டைத் துப்புரவாக வைத்துக் கொள்வதும், விருந்தினர்களுக்கு வேண்டியவற்றைச் செய் வதும் ஆகிய காரியங்களேப் பருவம் வராமலே செய்யலாம். பயிற்சி இருந்தால் போதும். ஆனுல் பருவம் அடைந்தவுடன் தான் கணவனுல் வரும் இன்பத்தை அடைய முடியும். இது அடிமரம் நன்ருக வலுத்து, கிளேகள் எல்லாம் விட்டு, மொட்டும் அரும்பின பிறகு மலர் தோன்றுவது போன்ற நிலே. மலர் தனியே தோன்ருது. அடிமரம் முதலிய உறுப்புகள் எல்லாம் மெல்ல மெல்ல வளர்ந்து அரும்பு தோன்றி அதிலிருந்து மலர் தோன்றும்.

## முயற்சியும் அநுபவமும்

அப்படித்தான் இறைவன் அருள் அநுபவம் பெறுகின்ற மலர் கடைசியில் வரும். ஆனுல் அதற்குமுன் உள்ள வற்றைப் பக்குவம் இல்லாதவர்களும் தெரிந்து கொள்ள லாம். நம்முடைய முயற்சி ஒரு பகுதி; அநுபவம் மற்றெரு பகுதி. முயற்சி இல்லாமல் அநுபவம் வராது. நம்முடைய நிலேயில் செய்கிற முயற்சிகள் பல உண்டு. அவற்றுள் மிகவும் முக்கியமானது, நல்லவர்களுடன் சேர்ந்து உறவாடுவது. அப்படி உறவாடுவதால் முதலில் இறைவன் உண்டு என்ப தும், அவன் திருவருளால் உயர்ந்த இன்பம் கிடைக்கும் என்பதும் உறுதியாக நம்முடைய உள்ளத்தில் தோன்றும்.

பெரியவர்களோடு சேராவிட்டால் அப்படிஒன்று சாத்தியமா என்ற ஐயமே தோன்றும்.

யாரோடு நாம் சேருகிறோமோ அதற்கு ஏற்றபடி நமது உள்ளத்தில் நினைப்புகள் உருவாகும். வியாபாரியோடு சேர்ந்தால் வியாபாரத்தைப் பற்றிய எண்ணங்களே உள்ளத்தில் வளரும். அறிவாளியோடு சேர்ந்தால் அறிவு பெற வேண்டுமென்ற ஆசை உண்டாகும். இறைவனுடைய அருள் அநுபவம் பெற்றவர்களோடு சேர்ந்தால் அந்த அநுபவம் நமக்கு வேண்டுமென்ற ஆசை எழும். பொருளும் வேண்டும்; அறிவும் வேண்டும்; அருளும் வேண்டும். ஆனால் முடிந்த முடிவாக நாம் பெறவேண்டியது இறை அருள் அநுபவம். ஆதலின் மற்ற மற்ற மக்களோடு உறவாடுவதைவிட இறைவனுடைய அருள் நெறியில் செல்கிறவர்களோடு கொள்ளும் உறவு அருளநுபவம் பெறும் முயற்சிக்குத் தூண்டுகோலாக இருக்கும். அதுதான் உயிரோடு ஒட்டிய இன்பத்தைப் பெறுவதற்கு வழி.

நல்லவர்களுடைய கூட்டுறவினால், கல்வியினால் அறிந்து கொள்ளாத பல உண்மைகளைத் தெளியலாம்.

## கல்வி

மனிதனுக்கு அறிவு இயல்பாக இருந்தும் அது சிறப்பது இல்லை; விளக்கம் பெறுவது இல்லை. அறிவு விளக்கம் பெறுவதற்குக் கல்வி தூண்டுகோலாக அமைகிறது. அறிவு கல்வியினால் விளக்கம் பெறும் என்பதை,

"தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு"

என்னும் குறள் சொல்கிறது. பல நூல்களைப் படித்துத் படித்துப் பலருக்கு ஐயங்கள் உண்டாவது உண்டு. கல்விக்குப் பிறகு கேள்வி என்ற படி இருக்கிறது. கேள்வியினால் ஐயம் தீரும். கல்வியைவிடக் கேள்வி சிறந்தது. நூல்களைப் படிக்கத் தெரியாதவர்கள் கூடக் கேள்வியினால் சிறந்த

அறிஞர்களாகியிருப்பதைப் பார்க்கிறோம். பழங்காலத்தில் இந்த நாட்டுப் பெண்மணிகள் பலர், நூலைப் படித்து அறிய முடியாவிட்டாலும் கேள்வியினால் பல செய்திகளைத் தெரிந்து கொண்டிருந்தார்கள்.

## கேள்வியின் சிறப்பு

ஓர் ஆண்டுக்கு முன்னால் அவரை காய்த்திருந்தது. காய்களைப் பறித்து வற்றல் போட்டு வைத்திருக்கிறோம். இந்த ஆண்டு அந்த வற்றலை வைத்துக்கொண்டு, கூட்டு குழம்பு முதலியவற்றைச் செய்கிறோம். ஆனால் இந்த ஆண்டும் நாம் அவரைக் கொடி போட்டிருக்கிறோம். முற்றத்திலுள்ள அவரைக் காயைப் பறித்து வந்து அவற்றைக்கொண்டு கூட்டு முதலியன செய்கிறோம். போன ஆண்டு பறித்து வற்றல் போட்டு வைத்திருந்த அவரைக் காயைக்கொண்டு கூட்டுச் செய்வதற்கும், இந்த ஆண்டு இன்றைக்கே தோட்டத்திற்குச் சென்று பச்சை அவரைக் காயைப் பறித்து வந்து கூட்டுச் செய்வதற்கும் வித்தியாசம் உண்டு. இன்று பறித்தவுடனே கூட்டுப் பண்ணியிருக்கும் அவரைக் காய்க்குச் சுவை மிகுதியாகவே இருக்கும். வற்றலைக் காட்டிலும் பச்சைக் காய் கறி சிறந்தது என்பதை நம்முடைய அன்றாட அநுபவத்தில் உணர்கிறோம். பல காலத்திற்கு முன்னால் பெரியவர்கள் நூல்களை எழுதியிருக்கிறார்கள். அவர்கள் எழுதிய நூல்களைப் படிக்கிறோம். அவை ஓரளவு பயன் கொடுக்கக் கூடியவையே. ஆனாலும் அநுபவ அறிவிலே சிறந்தவர்களிடம் அவ்வப்போது நேரில் கேட்கும் கேள்விக்குக் கல்வியறிவு ஒப்பாகாது. பிறர் எழுதிய நூல்களைப் படிப்பது, வற்றலைக் கொண்டு கூட்டு முதலியன பண்ணுவது போலாகும். ஆனால் நேரில் நமக்கு உபதேசம் செய்து ஐயங்களை நீக்குபவர்களுடைய அநுபவம் நிறைந்த வார்த்தைகள் பச்சைக் காய்கறி போல இருக்கும்.

> ''கற்றிலன் ஆயினுங் கேட்க அஃதொருவற்
> கொற்கத்தி னூற்றாந் துணை''

என்பது திருவள்ளுவர் வாக்கு. மனிதன் கற்கவேண்டியது இன்றியமையாததே. கற்பதற்கு வாய்ப்பு இல்லை என்றாலும் கேள்வி இருக்கவேண்டும். கற்பதற்கு ஒரு பருவம் உண்டு. இளமைப் பருவத்தில் கல்லாதவர்கள் பிற்காலத்தில் கற்பது என்பது அரிது. அப்படியின்றி எல்லாக் காலத்தும் கேட்க லாம். கற்றவர்களிடத்தில் சென்று நமக்கு வேண்டிய வற்றைக் கேட்டால் நம் நிலை அறிந்து எதைச் சொல்ல வேண்டுமோ அதைச் சொல்வார்கள். நாம் கேட்பவற்றில் ஐயம் இருந்தால் அவர்கள் அதைத் தெளிவிப்பார்கள். ஔவைப் பாட்டி அதனால் தான், ''கேள்வி முயல்'' என்று சொன்னாள். கற்றவனும் தான் கற்ற கல்வியில் உண்டாகிற ஐயங்களைக் கேள்வியினால்தான் தீர்த்துக் கொள்ளவேண்டும். ஆகையால் கல்விக்கும் கேள்வி இன்றியமையாதது.

ஒருவனுக்குக் காது நன்றாக இருக்கிறது. அவன் ஒன்றைக் கேட்டால் நன்றாகப் புரிந்துகொள்கிறான். காது செவிடாக இருந்தால் என்ன சொன்னாலும் காதில் விழாது. நல்ல விஷயங்களைச் சொல்பவர்கள் இருக்கும்போது, கேட் காமல் இருந்தால் நம் காது ஒலியைக் கேட்கும் காதாக இருந்தாலும் ஒரு வகையில் செவிடுதான். இயல்பாக உள்ள காதுக்குப் பின்னும் கேள்வி என்ற சலாகை போட்டால் நல்ல காதாகும். விக்கிரகங்களைப் பண்ணுகிறவர்கள் காது, மூக்கு முதலியவற்றைக் கடைசியில் சுத்தம் பண்ணுவதற்கு ஒரு சலாகையை எடுத்துக் குடைவார்கள். பிசிர் எல்லாம் போவதற்கு அப்படிச் செய்வது உண்டு. அப்படி நம்முடைய காதிலே ஒரு சலாகையைப் போட்டுக் குடைய வேண்டும். அது இரும்புச் சலாகையன்று. நல்லவர்களிடம் கேட்கும் கேள்வி என்னும் சலாகையினால் முன்னாலே துளையுள்ள காதைப் பின்னும் துளையிட்டுத் தூய்மைப் படுத்த வேண்டும்.

''கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.'' (குறள்)

வார்த்தைகளைக் கேட்கும் ஆற்றல் உடையவனானாலும் அறிந்தவர்பால் கேள்வி பெறாதவன் செவிடனுக்கு ஒப்பானவன்.

## கேள்வியின் வகை

காதில் விழுகிறது எல்லாம் கேள்வி ஆகாது. செவிடன் ஒருவன் ஓரிடத்தில் நிற்கிறான். அப்போது வெடி ஒன்று வெடிக்கிறது. அவன் செவிடன் ஆகையால் வேட்டின் ஒலியை அவன் காது கேட்பது இல்லை. ஆனால் கண் உடையவன் ஆகையால் புகையைப் பார்க்கிறான். ''இது என்ன புகை?'' என்று கேட்கிறான். வெடி வெடித்தால் காதினாலே கேட்பதற்கு ஒலியும், கண்ணினாலே பார்ப்பதற்குப் புகையும் இருக்கின்றன. ஆகையால் அந்த வெடியின் அநுபவம் இரண்டு இந்திரியங்களைச் சாருகிறது. கண்ணும், காதும் நன்றாக இருப்பவன் வெடியின் அநுபவத்தை முழுவதும் பெறுகிறான். காது இல்லாதவன் அரைப் பாகத்தைப் பெறுகிறான். அது மாதிரியே ஒலி மாத்திரமாக இருக்கிறவற்றைத் தெரிந்து கொள்ளும் காது பாதிக் காது. நல்லவர்களுடைய சிறந்த உபதேசங்களைக்கேட்கும் காது முழுக் காது. ஒருவன் பிரெஞ்சு மொழியில் பேசுகின்றான். அது காதில் விழுகிறது. ஆனால் அதனால் என்ன பயன்? நம்முடைய காது அந்த ஒலியை மாத்திரம் கேட்கிறது. அதன் பொருளை நாம் தெரிந்து கொள்வது இல்லை. காதிலே ஒலி விழுவதனால் மாத்திரம் பயன் இல்லை. அதன் கருத்தை உணர்ந்து நாம் அறிவு பெற வேண்டும். அறிவு பெறுவதற்குரிய நல்லவற்றைக் கேட்பதுதான் கேள்வி; அதைச் செவிச் செல்வம் என்பார் திருவள்ளுவர்.

காது இருந்தும் புரியாத மொழியைக் கேட்டால் அது செவிட்டுக் காதுக்குச் சமானமாகிறது. செவிட்டுக் காதைவிட அது ஒரு பங்கு உயர்வானாலும் இரண்டுக்கும் வேறுபாடு சிறிதுதான். ஒன்று ஒலியையே கேட்பதில்லை. மற்

ளென்று ஒலியை மாத்திரம் கேட்கிறது. இதற்கு அடுத்தபடி ஒன்று உண்டு. பொருள் தெரிந்தாலும் நமக்கு நலம் தருகிற பொருளைக் கேளாமல் வேறு எதையெதையோ கேட்டுக் கொண்டிருந்தால் நம் காது முழுப்பயனைப் பெற்றதாக அமையாது.

கற்க வேண்டும். கற்றபின் கேட்க வேண்டும். நல்ல கேள்வி என்பது உயிருக்கு நலம் தருகிற உபதேசங்களைக் கேட்பது. கல்வி கேள்வி ஆகிய இரண்டும் பெற்றவனுக்கு அறிவு சிறக்கிறது. நல்ல உபதேச நூல்களை நாம் கற்க வேண்டுமென்றும், அப்போது உண்டாகும் ஐயங்களைக் கேள்வியினால் போக்க வேண்டுமென்றும் சொல்வார்கள். கேட்ட பிறகும் கேட்டவற்றைச் சிந்தித்துத் தெளிந்து கொள்ள முயலவேண்டும். கற்றல், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்று ஐந்து வகையான முயற்சிகள் படிப்படியாக உள்ளன.

கற்றல் என்பது அச்சில் இருக்கிற எல்லாவற்றையும் கற்பது ஆகாது. நம்முடைய லட்சியம் எதுவோ அதனை அடைவதற்கு உறுதுணையாக இருப்பனவற்றையே கற்க வேண்டும்.

"கல்வி கரையில கற்பவர் நாட்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகில் தெரிந்து"

என்பது நாலடி. கல்விப் பரப்புக்கு எல்லையே இல்லை. நாம் எதனைத் தெரிந்து கொண்டால் முன்னேறலாம் என்பதை முதலில் தெரிந்துகொண்டு படிக்கவேண்டும். பழங்காலத்து நூலாசிரியர்கள் இன்ன நூலுக்கு இன்னவன் அதிகாரி என்று முன்னாலேயே சொல்லியிருப்பார்கள். வைத்திய வேலைக்கு வைத்திய நூல்களைப் படிப்பது பயன்; சோதிடம் படிப்பதனால் அந்த வேலைக்குப் பயன் இல்லை. எந்தத் துறையில் நம் வாழ்வை நாம் அமைத்துக்கொள்ள வேண்டுமென்று

நினைக்கிறேமோ அந்தத் துறைக்கு ஏற்ற நூல்களைக் கற்பதே நல்லது.

ஆகவே நமக்கு ஒரு லட்சியம் வேண்டும். அந்த லட்சியத்திற்கு ஏற்ற நூல்களைப் பயில வேண்டும். நூலறிவினுல் தெளியாமல் உள்ள ஐயங்களைத் தக்கவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். நல்லவர்களுடன் பழகுவதனுல் அவர்கள் வாயிலாகப் பலவற்றைக் கேட்டு ஐயம் நீங்கித் தெளிவு பெறலாம்.

## சிந்தித்தலும் தெளிதலும்

கேட்ட பிறகும் செய்ய வேண்டிய காரியம் உண்டு. கேட்டு அறிந்தவற்றை நாம் தனியே இருந்து சிந்திக்க வேண்டும். அப்படிச் சிந்திக்கச் சிந்திக்க நல்ல தெளிவைப் பெறுவோம். சிந்திப்பதன் பயன் தெளிவு. தெளிந்த பிறகு அந்தத் துறையில் நாம் முயற்சி செய்யவேண்டும். கற்றலுக்கு அடுத்தபடி வருவது கேட்டல். கேட்டலுக்கு அடுத்தபடி வருவது சிந்தித்தல். சிந்தித்தலின் பயனுக வருவது தெளிதல். வெறும் அறிவு அநுபவத்தை உண்டாக்காது. தெளிதல் என்பது அறிவின் கொழுந்து. கற்கும் போது அறிவு உலகத்தில் காலை எடுத்து வைக்கிறேம். கேள்வியினுல் சிறிது தூரம் பயணம் செய்கிறேம். சிந்தனையினுல் பின்னும் உறுதி பெறுகிறேம். தெளிதல் வந்துவிட்டால் அறிவின் எல்லையை அணுகுகிறேம். அது போதுமா? ''இப்படி வியாபாரம் செய்தால்இன்ன லாபம் கிடைக்கும்'' என்று ஒருவன் தெளிந்து கொள்கிறுன். அந்தத் தெளிவே அவனுக்கு லாபமாகாது. செய்கிற செயலைப் பற்றிய நுணுக்கங்களை எல்லாம் தெரிந்து கொண்டு அப்பால் செயலிலே புக வேண்டும். நம்பிக்கை கொண்ட அளவில் பயன் வந்து விடாது. அதற்கு அடுத்தபடி முயற்சி செய்யவேண்டும். அப்போது தான் பயன் உண்டாகும்.

## முயற்சியின் அவசியம்

பலவற்றைக் கற்றும், பின்பு கேட்டும், அதற்கப்பால் சிந்தித்தும், அதன் பயனாக நல்ல தெளிவை அடைந்திருப்பவனுக்கு முயற்சி செய்யும் ஆர்வம் உண்டாகும். தெளிவு உறுதியாக இருந்தால் அந்த ஆர்வம் நிச்சயமாக எழும். அந்த ஆர்வத்தின் பயனாக முயற்சி உண்டாகும்; அதன் பயனாக அநுபவம் தலைப்படும். முயற்சியினிடையே உண்டாகும் தடைகளைக் குருநாதன் கிருபையால் போக்கிக் கொள்ளலாம்.

மெத்தப் படித்தவனுக்குப் படித்த அளவில் அறிவு உண்டாகிறது. ஆனால் அவனுடைய உள்ளத்தில் சில ஐயங்கள் இருக்கத்தான் இருக்கும். தத்துவ நூல்களைப் படித்துவிட்டு அதனால் ஓரளவு அறிவு பெற்று அந்த அறிவு தான் அநுபவம் என்று ஏமாந்து போகிறவர்கள் பலர் இருக்கிறார்கள். யாரேனும் பெரியவர் உயர்ந்த அநுபவத்தைப் பற்றிப் பேசுகிறபோது அவர் சொல்வது ஓரளவுக்கு நமக்கு அறிவு அளவில் விளங்குமானால் நாமும் அவரை ஒத்த நிலையில் இருப்பதாக எண்ணிக்கொண்டு விடுகிறோம். இது நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வது, அறிவு அதிகமாக அதிகமாக நாம் இன்னும் தெளிவு பெறவில்லையே என்ற ஏக்கம் இருக்க வேண்டும். தெளிவு பெற்றவர்களோ இந்தத் தெளிவு இருந்தும் இன்னும் முயற்சி பண்ணவில்லையே என்ற ஏக்கத்தைப் பெறுவார்கள்.

கேள்வியினால் அநுபவம் வந்து விடாது. சிந்தித்துத் தெளியவேண்டும். தெளிவுக்குப் பிறகு அநுபவம் பெற வேண்டுமானால் நிட்டை கூடவேண்டும். பலபல பொருள்களை வாங்கி எடுத்துக் கொண்டு தெருத் தெருவாகச் சென்று விற்று, அதனால் கிடைத்த பணத்தைக் கொண்டு வந்து பாதி ராத்திரியில் யாரும் இல்லாத வேளையில் எண்ணிப் பார்த்து, தன் பெட்டியில் வைத்துப் பூட்டுகிறான் வியாபாரி. 'வீதியில் வியாபாரம் பண்ணினோமே, அந்தப் பணத்தை வீதியில் எண்ணிப் பார்க்கலாம், என்று யாரும்

எண்ணமாட்டார்கள். வியாபாரம் நாலு பேருக்குத் தெரியப் பண்ணினுலும், அதன் பயனுகிய பணம் தனிமையில் எண்ணிப் பார்த்து மகிழ்வதற்குரியது. அப்படித்தான் கல்வி, கேள்வி ஆகியவை சத்சங்கத்தினுலும், பெரியவர்களுடைய தொடர்பினுலும் உண்டாவன. ஆனுல் சிந்தனையும் தெளிவும் அநுபவமும் தனித்து நின்று பெறுவதற்குரியவை.

## சார்பின் பயன்

கல்வி கற்றவர்கள் அந்தக்கல்வியினுல் அநுபவம் பெற்றதாக எண்ணுவது ஏமாற்றம் என்று சொன்னேன். அது போலத்தான் கேள்வி கேட்டவர்களும் அந்தக் கேள்வி அளவில் அநுபவம் வந்துவிட்டதாக ஏமாறுவதும் உண்டு. பெரியவர்களிடையே சேர்ந்து இருந்தால் மாத்திரம் ஒருவனுக்கு எல்லாம் வந்துவிடாது. அவருடைய சார்பு இருக்கிறவரைக்கும் மனம் உயர்ந்த நிலையில் இருக்கும். அவ்வளவு தான். மங்கைப் பருவம் வராத பெண்ணுக்கு அந்தப் பருவம் வந்த பெண்களோடு பழகினுல் அவர்கள் பேசுகின்ற பல இரகசியங்கள் தெரியலாம். ஆனுல் அவற்றின் உண்மையை அநுபவித்துப் பார்க்கின்ற ஆற்றல் அவளுக்கு இல்லை. சத்சங்கத்தில் பழகுகிறவர்களுக்கு ஒரு நிலைவரைக்கும் மனம் உயர்ந்து வரும். அப்பால் அநுபவ உலகம் அவர்களுக்கு விளங்கவே விளங்காது. அநுபவிகளுடன் பழகுவதனுல் அநுபவத்திற்குரிய பொருள் ஒன்று உண்டு என்று தெரியுமேயன்றி அநுபவம் கிடைக்காது. பிறர் நமக்கு அரிசி தரலாம். நமக்காகச் சமையல் செய்யலாம். சாப்பாட்டை நம்முடைய இலையில் பரிமாறலாம். பின்னும் கருணை உடையவர்களானுல் நம் வாயிலும் ஊட்டலாம். ஆனுல் நமக்காக அவர்கள் விழுங்கமுடியாது. விழுங்கும் முயற்சி இருந்தால்தான் சோறு நம் வயிற்றில் புகுந்து அதனுல் வருகிற அநுபவம் நமக்குக் கிடைக்கும். சத்சங்கத்தில் சேர்ந்தால் வழிபுலப்படுமேயன்றி அநுபவம் கிடைக்காது. தெய்வங்கூடக் காட்டுமேயன்றி ஊட்டாது.

**தனிமை**

ஆதலினால் முயற்சி செய்யும் ஆர்வம் வேண்டும். தனிமை வேண்டும். அதனால்தான், "தனித்திரு, பசித்திரு, விழித்திரு" என்று பெரியவர்கள் விதித்திருக்கிறார்கள். கல்வி, கேள்வி, சிந்தித்தல், தியானித்தல் ஆகிய படிகளை எல்லாம் கடந்து, நிஷ்டை கூடும் நிலைக்கு வரவேண்டும். தனிமையில் மனத்தைச் செலுத்தி, சிந்தித்து இறைவனுடைய அருளிலே ஈடுபட வேண்டும். அப்போது ஆண்டவன் நம்மைச் சந்திக்க வருவான். கூட்டத்தில் கூடி இருக்கும்போது அவனுடைய அருள் நமக்குக் கிடைக்கத்தான் கிடைக்கிறது. அது நாலு பேருக்கு நடுவில் தன்னுடைய நாயகன் கையிலுள்ள புத்தகத்தை நாயகி பெறுவது போன்றது.

நாயகன் தான் கொடுக்கவேண்டுமென்பது இல்லை. வேறு யார் வேண்டுமானாலும் கொடுக்கலாம். கணவனும், மனைவியும் கடைக்குப் போகிறார்கள். அங்கே நிறையச் சாமான் வாங்குகிறார்கள். கணவன் சுமையைத் தூக்க முடியாமல் ஒரு பாகத்தை நாயகியினிடம் கொடுக்கிறான். அப்போது அவனிடமிருந்து வாங்கிக் கொள்கிறாள். அவன் பழங்களை வாங்குகிறான். ஒன்றை நாயகிக்குக் கொடுக்கிறான். இவை எல்லாம் அந்த இரண்டு பேருக்குமிடையே நடந்தாலும் இந்தத் தகுதியை மற்றவர்களும் பெறலாம். நாலு பேர் காணச் செய்கின்ற இத்தகைய காரியங்களை இரண்டு ஆடவர்கள் தங்களுக்குள் செய்யலாம். எந்த இரண்டு பேர்களாக இருந்தாலும் செய்துகொள்ளலாம். நாயகனிடம் இப்படி வாங்குவதில் நாயகிக்கு ஓர் இன்பம் இருக்கலாம். ஆனாலும் நாயகனைப் பெற்றதனால் அவள் அடைகிற தனி உரிமையான இன்பம் இது அன்று. அதனை அவள் தனித்து இருந்து பெறுவாள். ஆண்டவனுடைய திருவருளால் நாம் இப்போது பெற்ற பல வகையான நலங்கள் பொதுவான அருள். கடைவீதியில் நாயகனும், நாயகியும் சந்தித்து ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்வது போன்றது. ஆனால்

அவனைத் தனியாகச் சந்திக்கின்ற சந்திப்பு, தனி உரிமை பெற்றது.

இறைவன் அப்படித் தனியே சந்திக்கின்ற நிலை உண்டு. தனி என்பது யாரும் இல்லாத இடம். யாரும் இல்லாத இடம் என்றால் இறைவன் இல்லாத இடம் அன்று. அவன் இல்லாத இடமே இல்லை. அவனை நாம் சந்தித்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் நாம் தனியே இருந்து சந்திக்கிறது இல்லை. நாம் மனத்தோடு, உடம்போடு சந்திக்கிறோம். அதனால் அவனை நாம் இன்னும் கண்டுகொள்ள முடிவதில்லை. அவனும் நம்மோடு பழகினாலும் நாலு பேர்களுக்கு நடுவில் இருக்கிறானே என்று ஏதோ அயலான் போலவே பழகுகிறான். இப்படி உள்ள நாம் தனியாக வந்து அவனைச் சந்தித்தால் நம்மை அணைத்துக்கொள்வான். முத்தி இன்பம் தருவான். நம்மோடு பிறவிதோறும் வந்திருக்கிற பலவற்றை விட்டுவிட்டுத் தனியே செல்கிற பழக்கம் நமக்கு இல்லாமல் போயிற்று. ஆகையால் அவன் தொடர்பு நமக்கு இருந்தாலும் அவனைத் தனியே சந்திக்க இயலாமல் போகிறது அதனால் வரும் இன்பமும் நமக்குக் கிடைப்பது இல்லை.

கல்வியினாலும், கேள்வியினாலும் ஆண்டவனைச் சந்திக்க முடியாது என்று அருணகிரியார் சொல்கிறார். யாரும் இல்லாத இடத்திலே என்னுடைய நாயகனைச் சந்திக்க வேண்டும் என்று காதலி ஏங்குகிறாள். அவளைப் பார்த்து அவளுடைய தாய் சொல்கிறாள்: ''பெண்ணே, அவன் யாரும் உள்ள இடத்திலும் இருக்கிறான். யாரும் இல்லாத இடத்திலும் இருக்கிறான். யாரும் இல்லாத இடத்தைத் தெரிந்துகொண்டு போகவேண்டும். உன்னுடன் சிலபேரை அழைத்துக்கொண்டு போனால் அவன் தனியாக இருந்தாலும் பயன் இல்லை. நீ யாரும் இன்றித் தனியே இருந்தால் உன்னிடம் அவனே வந்து சந்திப்பான். ஆகவே அவன் தனியாக இருக்கிற இடம் எங்கே என்று ஆராய்வதில் பயன் இல்லை நீ மற்றவருடன் உறவு இல்லாமல் தொடர்பு இல்லாமல் தனியாக இருக்கிறாயா என்று அவன் ஆராய்ந்து பார்க்கிறான்.

நீ தனி நின்றுல் அவனே அங்கே வந்து இன்பம் தருவான்'' என்றுசெய்வதுபோல அருணகிரியார் உபதேசம் செய்கிருர்.

## தனிமைக்குத் தடை

''தனியாக இடம் ஒன்று இருக்கிறதா? அது எனக்குத் தெரியவில்லையே!'' என்றும், ''அந்த இடத்திற்கு எப்படிப் போவது?'' என்றும் நாம் கேட்கிறோம். அதற்கு விடை அளிப்பார் போல அருணகிரியார் சொல்கிருர். ''ஆம். அப்படி ஓர் இடம் இருக்கிறது. ஆண்டவன் தனி வெளியில் இருக்கிருன். அவனை நிச்சயமாகச் சந்திக்சலாம். ஆனுல் அந்த இடத்திற்குப் போவதற்கு முன் நீ தனியாக வேண்டும். உன்னிடம் இரண்டு பேர் எப்போதும் கூட இருக்கிருர்கள்'' என்பது போல இந்தப் பாட்டைச் சொல்லுகிருர்.

வெளியில் நட்பாடுவதற்காக ஓர் அரசன் வந்து நிற்கிருன். வேறு ஒருவன் கோட்டைக்குள் இருக்கிருன். அவனை வெளியில் இருப்பவன், ''நான் உனக்கு நன்மை செய்கிறேன்'' என்று ஆர்வத்தோடு அழைக்கிருன். ஆனுல் உள்ளே இருப்பவனுக்குத் தடையாகக் கோட்டையும் அதைச் சூழ்ந்த அகழும் அருக்கின்றன. இந்த இரண்டும் வெளியில் இருப்பவனையும் உள்ளே இருப்பவனையும் இணைய மாட்டாமல் தடுக்கின்றன. பூட்டிய கோட்டையும், பாலம் இல்லாத அகழியும் இருப்பதனுல் அந்த இரண்டையும் அடியோடு தகர்த்தும், தூர்த்தும் வெளியில் இருப்பவன் உள்ளே போகவேண்டும்; அல்லது உள்ளே இருப்பவன் வெளியில் இருப்பவனேடு சேரவேண்டும். வெளியில் இருக்கும் மன்னனேடு உள்ளே இருக்கும் சிறைப்பட்ட மனிதன் சேர்ந்தால் இன்பம் உண்டாகும். சேருவதற்குத் தடை இரண்டு. அவன் எத்தனைதான் ஆர்வம் படைத் திருந்தாலும் வெளியில் உள்ளவன் எத்தகைய ஆற்றல் உள்ளவனுக இருந்தாலும் இந்த இரண்டு தடைகளும் நீங்காத வரையில் அவர்கள் சந்திக்க முடியாது. இதில் சிறிதும் ஐயமில்லை. இது உண்மையானது. இது போல் அருணகிரியார் சொல்லுகிருர்.

**யான்தான் எனும்சொல் இரண்டும்கெட்**
**டால் அன்றி யாவருக்கும்**
**தோன்ருது சத்தியம்; தொல்லைப் பெருநிலம்**
**சூகரமாய்க்**
**கீன்ருன் மருகன் முருகன் க்ருபாகரன்**
**கேள்வியினுல்**
**சான்ருரும் அற்ற தனிவெளிக் கேவந்து**
**சந்திப்பதே.**

சந்திப்பது-சேர்தல்: ஒன்றுபடுதல். ஆண்டவனேடு ஒன்று படுகிற இன்பம் நமக்குக் கிடைக்கவேண்டுமானுல் இரண்டு தடைகள் போகவேண்டும். "இரண்டும் கெட்டாலன்றிச் சந்திப்பது தோன்ருது" என்று முடிக்கிருர். இது சத்தியம் என்று வற்புறுத்திச் சொல்லுகிருர். வெறும் கேள்வியினுல் இதைச் சாதிக்க முடியாதாம்.

அவன் எங்கே இருக்கிருன்? அவனை எங்கே சந்திப்பது? சான்று ஆரும் அற்ற தனிவெளியில் சந்திக்க வேண்டும். ஒரு சாட்சியும் இல்லாத பாழ்நிலம் அது. வேறு ஒரு சான்று இருந்தால் அது தனிமையாகாதே! நமக்கு இப்போது சரீரம், பொறி புலன்கள், உலகம், பூதங்கள் ஆகிய எல்லாம் சாட்சியாக இருக்கின்றன. இந்தச் சாட்சி களெல்லாம் உடனிருக்கும் வரையில் அந்தத் தனிவெளிக்குப் போகமுடியாது. ஆண்டவன் எல்லா இடங்களிலும் மறைந்து நின்ருலும் அவனை வெளிப்படுத்திக் காண வேண்டும். மற்றப் பொருள்கள் அவனை மறைத்து நிற்கின்றன. அவையற்ற பாழிடந்தான் தனிவெளி. அது மறைப்பு இல்லாத இடம். அங்கே போகவேண்டும், அந்த இடத்தில் அவனும் நாமுமே இருக்கவேண்டும். அது சாட்சி இல்லாத இடம். அது தனி வெளி. அந்தத் தனி வெளியைப் பற்றிக் கந்தர் அலங்காரத்தில் வேறு ஓரிடத்தில் அருணகிரியார் சொல்லியிருக்கிருர்.

**"ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத் துச்சியின்மேல்**
**அளியில் விளைந்ததோர் ஆனந்தத் தேனை அநாதியிலே**
**வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறும்தனியைத்**
**தெளிய விளம்பிய வாமுகம் ஆறுடைத் தேசிகனே."**

அதனை ஞான வெளி என்றும் சிதாகாசம் என்றும் பாழ் என்றும் பல வகையாகச் சொல்வார்கள்.

"அல்லும் பகலும் இல்லாச் சூதானது 'அற்ற வெளி"

என்று பிறிதோரிடத்தில் சொல்வார். அங்கே இரவு இல்லையாம். பகல் இல்லையாம். அந்த இடம் ஒரு பூதர்க்கும் தெரியாதாம்.

"சூதான தற்ற வெளிக்கே ஒளித்துச் சும்மா இருக்கப்
போதால் இனி; மனமே தெரியாதொரு பூதர்க்குமே"

என்பர்.

'ஒரு பூதரும் அறியாத் தனிவீடு"

என்றும் அதையே சொல்வார்.

தெளிவும், அநுபவமும் இல்லாமல் இறைவனுடைய திருவருள் இன்பத்தைப் பெற இயலாது என்பதை வற்புறுத்திக் கூறவந்த அருணகிரிநாதர்,

கேள்வியினால்
சான்று ஆரும் அற்ற தனிவெளிக்கே வந்து
சந்திப்பதே

என்றார். ஆண்டவன் தனி வெளியில் இருக்கும் போது அவனை அணுகினாலும் அவன் வேறு, நாம் வேறு என்ற எண்ணமே தோன்றாது.

### யான்—தான்

யான், தான் என்ற இரண்டு சொல்லும் ஒருசேரச் சொல்லும்போது அந்த இரண்டு சொல்லுக்கும் உரிய பொருள் வெவ்வேறு என்று தோன்றும்.

"நான்வே றெனாதிருக்க நீவே றெனாதிருக்க"

என்று அருணகிரியார் திருப்புகழில் பாடுவார். கண்ணுக்குப் புறம்பே மையை வைத்திருந்தால் தனியே கண்மையைத் தெரிந்துகொள்ளும், கண்ணுக்கு இட்டால் அது தெரிவது

இல்லை. இறைவனை விட்டுத் தனியாக இருக்கும் போது அவனும் நாமும் வேறு என்று தோன்றும். அவனோடு ஒன்றிக் சலந்த பிறகு யான், தான் என்ற சொற்கள் தோன்றாத அநுபூதி நிலை உண்டாகிறது. எனவே,

யான் தான் எனும் சொக் இரண்டும் கெட்
டாலன்றி
யாவருக்கும் தோன்றாது

என்று சொன்னார், இதை விளக்கமாகப் புரிந்துகொள்ள ஓர் அநுபூதிப்பாட்டை இங்கே பார்க்கவேண்டும்.

"யான் ஆகிய என்னை விழுங்கி வெறும்
தானாய் நிலைநின்றது தற்பரமே."

இங்கே இறைவனை 'வெறும் தான்' என்று சொல்கிறார். யான் என்பதற்கு இனமாகிய தான் என்பது வேறு, வெறும் தான் என்பது வேறு. தான் என்பதற்கு அவன் என்பது பொருள், அது படர்க்கைப்பெயர். யான், நீ, தான் என்பன முறையே மூன்று சொற்களும் சொல்லும் நிலையில் மூன்று பொருள்களும் வேறாகத் தோன்றும், யான் என்பது கெட்டால் எல்லாச் சொல்லும் கெடும். தான் என்ற ஒன்றே நிலை நிற்கும், அப்போது அதனைக் சுட்டிக்காட்ட, தான் என்று சொல்லால், சொல்ல, யாரும் இல்லை, ஆகையால்,

"யானாகிய என்னை விழுங்கி வெறும்
தானாய் நிலை நின்றது தற்பரமே."

என்று அநுபூதியில் சொன்னார். அந்த அலங்காரத்தில்,

யான் தான் எனும் சொல் இரண்டும் கெட்
டாலன்றி
யாவருக்கும் தோன்றாது சத்தியம்

என்று சொல்கிறார், யான் தான் என்னும் பொருள் இரண்டு கெடுவது இல்லை. யான் கெட்டு, தானுடன் இசைய வேண்டும். அப்போது தான் என்று சொல்வதற்கு ஆளும் இல்லை; பேச்சும் இல்லை. பொருள்கள் இரண்டு ஒன்றாகும்

போது சொல்ல ஆள் இல்லாத அநுபவ நிலை உண்டாகிறது. சொற்கள் இரண்டும் அப்போது இல்லை. பொருள் இரண் டைக் கண்டு இருவேறு சொல்லாகச் சொன்னாலும், பிறிதாக நிற்கும் ஒன்றை வேறாகக் கண்டு அதைமட்டும் சுட்டினாலும் பேதநிலைப் பேச்சுத்தான். இரண்டற்ற அத்துவித நிலை அன்று. இரண்டற்ற அத்துவித நிலையில் யான் தான் என்னும் சொல்லுக்கு இடம் இல்லை. எங்கே சொல் நிற்கிற தோ அங்கேதான் அநுபவம் கிடைக்கிறது.

### சொல் இறந்த நிலை

ஒருவனுக்கு மயக்க மருத்தைக் கொடுத்து அவன் உடம் பிலுள்ள புண்ணைக் கீறிச் சிகிச்சை செய்ய டாக்டர் முற்படு கிறார். மயக்க மருந்தைக் கொடுக்கும்போது அவனுக்கு உணர்ச்சி இருக்கிறதா இல்லையா என்று சோதிப்பதற்கு ஒன்று, இரண்டு, மூன்று என்று சொல்லிக்கொண்டே வரச் சொல்வார். அப்படிச் சொல்லி வரும்போது நோயாளி எப் போது எண்ணுவதை நிறுத்தி விடுகிறானோ அப்போது அவனுக்கு மயக்கம் நன்றாக ஏறி விட்டது என்று டாக்டர் தெரிந்துகொள்வார். அவன் மயக்கமுற்ற நிலை சொல் அடங் குவதனால் தெரிகிறது. சொல் அடங்கும்போது மனமும் நிற்கிறது.

அதுபோல் யான் தான் என்னும் சொற்கள் எப் பொழுது அடங்குகின்றனவோ அப்போது அநுபவம் தலைப் படும். அதனால், "யான் தான் எனும் சொல் இரண்டும் கெட்டாலன்றித் தோன்றாது" என்றார். கேள்வியினால் எல்லாவற்றையும் சாதிக்கலாம் என்று இருப்பவர்களுக்கு அநுபவம் வராது. சொல் உள்ளவரையும் அந்த இன்ப அநு பூதி இல்லை. சுட்டு உள்ளவரையும் அந்த இன்பம் இல்லை. யான் தான் என்ற விவகாரம் இருக்கும் மட்டும் அநுபவம் தோன்றாது. இந்தச் சொல்லிறந்த அநுபவத்தையே முருகன் தனி வெளிக்கே வந்து சந்திப்பது என்று சொல்லுகிறார். தனி வெளி என்று சொன்னது பௌதிக ஆகாசத்திலிருந்து

வேறுபடுத்திக் காட்டுவதற்காக, ஆகாசங்களில் பலவகை உண்டு. பஞ்சபூதங்களில் ஒன்ருன பௌதிக ஆகாசம் வேறு. தகராகாசம் வேறு. சிதாகாசம் வேறு. ஆண்டவன் ஞான வெளியாகிய சிதாகாசத்தில் இருக்கிருன். அங்கே போய் அவனைச் சந்திக்கவேண்டும். அப்படி ஒரு வெளி தனியாக இல்லை. நாம் உலகினின்றும் நழுவி எங்கே மனமற்று இருக் கிருேமோ அங்கே அந்த வெளி நமக்குக் கிடைக்கும், யான் தான் என்னும் இரண்டு சொல்லும் கெட்ட இடத்தில் அந்தத் தனி வெளி வந்து நிற்கும். அங்கே ஆண்டவனைச் சந்திக்கலாம்.

## தனி வெளியில் சந்தித்தல்

சான்று ஆரும் அற்ற தனி வெளி

என்று சொன்ஞர், கல்யாணத்திற்குச் சாட்சி வேண்டும். ஆனல் கடிமணத்திற்குச் சாட்சி கிடையாது. கல்யாணத் தில் இரண்டு கட்சிச் சம்பந்திகளும் இருப்பார்கள். ஊர்க் காரர்கள் இருப்பார்கள். கல்யாணத்தின் பயனுகிய கடி மணத்திலே யாரும் இருப்பது இல்லை. எந்தச் சாட்சியும் தேவையில்லை. அப்போது சாட்சி வேண்டுமென்று யாராவது சொல்வார்களா? அதுபோல் இறைவனைத் தனி வெளியில் சந்திப்பதற்குரிய முயற்சியை நாம் செய்வதற்குப் பல நல்ல வர்களுடைய தொடர்பு வேண்டும். சத்சங்கத்தில் பழகி நல்லவற்றைக் கேட்கவேண்டும். அவற்றினல் நாம் நம் முடைய நாயகனைத் தேடி அலைய வேண்டுமென்ற ஆசை யும் உள்ளத்தில் பிறக்கிறது.

அத்தகைய பழக்கத்தின் பயனுக எல்லோரையும் விட்டு நழுவித் தனியே நாயகனைச் சந்திக்க வேண்டுமென்ற ஆர்வமும் முயற்சியும் எழவேண்டும். சான்று ஆரும் அற்ற தனி வெளியில் முருகனைச் சந்தித்தால்தான் இன்பம் உண்டாகும்.

## 3

### கிருபாகரன்

இனி அருணகிரியார் முருகனைப் பற்றிச் சொல்ல வருகிறார். முருகன் பெரும் கருணையாளன். அவன் கூட்டத்திலும் இருக்கிறான். தனியாகவும் இருக்கிறான். அவன் எந்தச் சமயத்திலும் நம்மிடம் தனியாக வந்து இன்பம் தரக் காத்திருக்கிறான். நாம்தாம் தனியாக இருப்பதில்லை. குழந்தை என்றும், குட்டி என்றும், படிப்பு என்றும், பாசம் என்றும் பற்றுக் கொண்டிருக்கிறோம். இவற்றையெல்லாம் உதறி விட்டு நமக்காகத் தனியே நாயகன் காத்திருக்கின்றானே என்பதை எண்ணி நாம் அவனை நாடிச் செல்ல வேண்டும். நமக்கு அருள் செய்து இன்பம் தர வேண்டுமென்றே சமலைக்கு உறைவிடமான முருகன் காத்திருக்கிறான்

**முருகன் க்ருபாகரன்.**

### திருமால் மருகன்

அருணகிரியார் முருகப்பெருமானோடு சேர்த்துப் பல மூர்த்திகளுடைய பெருமைகளையும் சொல்வது உண்டு. சிவ பெருமான் திருக்கோயிலில் திருமாலுக்கு இடமில்லாமல் இருக்கலாம். திருமாலின் திருக்கோயிலில் சிவபெருமானுக்கு இடமில்லாமல் இருக்கலாம். ஆனால் அருணகிரியார் இயற்றிய சொற்கோயிலில் எல்லா மூர்த்திகளும் வருவார்கள். இங்கே முருகப்பெருமானுடைய மாமாவை நினைக்கிறார். காரணம் இல்லாமல் நினைக்கவில்லை. அப்படி நினைப்பதிலும் ஒரு கருத்தைக் குறிப்பாக வைத்திருக்கிறார்.

முருகன் திருமாலின் மருகன். அதைச் சொல்ல வருகிறார்.

**தொல்லைப் பெருநிலம் சூகரமாய்க் கீன்றான்**
**மருகன்**

## அடிமுடி தேடிய கதை

திருமால் ஒரு முறை வராகாவதாரம் எடுத்தார். பூமியை ஓர் அசுரன் சுருட்டிக்கொண்டு போக, ஆழ்கடலிலிருந்து அதனை மீட்பதற்காக வராகாவதாரம் எடுத்துத் தம்முடைய கொம்பினால் நிலமகளை மீட்டுக் கொண்டு வந்தார் என்பது ஒரு கதை. இது பாகவதத்தில் வருகிறது. சைவர்கள் ஒரு கதை சொல்வது உண்டு. திருமால் வராகாவதாரம் எடுத்தற்குரிய காரணத்தை அந்தக் கதை சொல்கிறது. திருவண்ணாமலை சம்பந்தமான வரலாற்றில் அந்தக் கதை வருகிறது.

ஒரு முறை திருமாலுக்கும் பிரமனுக்கும் ஒரு வாதம் எழுந்தது. திருமால், ''நான்பெரியவன்'' என்றார். பிரமன், ''நான்தான் பெரியவன்'' என்றான். இந்த இரண்டு பேர்களுக்குமிடையே தோன்றிய வாதம் முடிந்த பாடில்லை. அப்போது சிவபெருமான் தோன்றிப் பெருஞ்சுடராக நின்று, ''என்னுடைய அடியையும் முடியையும் யார் காண்கிறாரோ அவரே பெரியவர்'' என்று சொன்னார். அப்போது திருமால் பன்றி உருவம் எடுத்துப் பூமியைத் துளைத்துக் கொண்டு இறைவன் திருவடியைப் பார்க்கப் புறப்பட்டார். பிரம்மனோ அன்னப் பறவை உரு எடுத்துக் கொண்டு திருமுடியைப் பார்க்கப் புறப்பட்டான். இரண்டு பேரும் காண முடியாமல் திண்டாடினார்கள். அப்போது அவர்களிடத்தில் தோன்றிய அகந்தை மறைந்து விட்டது. அப்போது உண்டான சுடர்தான் பின்பு அண்ணாமலையாகவும் சிவலிங்கமாகவும் விளங்குகிறது என்று சிவபுராணம் சொல்கிறது. லிங்கோத்பவ மூர்த்தியின் வரலாறும் இதுதான்.

### கதையின் கருத்து

இந்தக் கதையினால் இரண்டு மூன்று கருத்துக்களை நாம் தெரிந்து கொள்ளவேண்டும். கடவுள் சிவபெருமானாகவும்,

திருமாலாகவும் காட்சியளிக்கிறார். யார் யார் எந்தக் கோலத்தில் நினைக்கிறார்களோ அதற்கு ஏற்றபடி காட்சி கிடைக்கிறது. விஷ்ணு புராணத்தைப் பார்த்தால் சிவனை ஏவலாளனாகவும், திருமாலைத் தலைவனாகவும் சொல்லி இருக்கும். சிவ புராணத்தைப் பார்த்தால் சிவன் பெரியவன் என்றும், திருமால் அடியான் என்றும் சொல்லியிருக்கும். இரண்டையும் பார்த்துச் சமாதானம் செய்துகொள்ள ஏதாவது வழியுண்டா? உண்டு.

ஒரு நாடகக்குழுவில் அண்ணன் தம்பி இரண்டு பேரும் மிகச் சிறப்பாக நடிக்கிறார்கள். அவர்களே அந்த நாடகக் குழுவின் தலைவர்கள். சிலநாள் அண்ணன் இராமனாக வேஷம் போட்டுக்கொள்வான்; தம்பி இராவணனாக வேஷம் போட்டு கொள்வான். சில நாள் தம்பி இராமனாகவும், அண்ணன் இராவணனாகவும் வேஷம் போட்டுக் கொள்வார்கள். எந்த வேஷம் போட்டாலும் வேஷத்திற்குத் தக்கபடி நடிப்பதில் அந்த இரண்டுபேரும் வல்லவர்கள். அதனால் அவர்களுக்குப் பெரும் புகழ் உண்டாயிற்று. முக்கியமாக இராவணன் வேஷம் போடும் போது அந்தச் சகோதரர்களுக்குப் பெருமை மிகுதியாயிற்று. ஏன் தெரியுமா? பார்த்தவர்கள் இராவணனைப் பாராட்டவில்லை; இராவணன் வேஷம் போட்டவனைப் பாராட்டினார்கள். இராவணன் வேஷம் போட்டு, பொல்லாதவனாக இருக்கக் கூடாது என்ற நீதியை மக்களுடைய உள்ளத்தில் வற்புறுத்தினமையினால் அந்த வேஷத்திற்குச் சிறப்பு உண்டாயிற்று. இப்படிச் செய்ய வேண்டுமென்று சொல்வது ஒருமுறை; இப்படிச் செய்யக் கூடாது என்று சொல்லிக் காட்டுவது ஒருமுறை. வேதம் 'இன்னது செய்; இன்னது செய்யாமல் ஒழி' என்று சொல் கிறது. வாக்கினால், ''இது செய், இது செய்யக் கூடாது' என்று சொல்வது ஒருமுறை; அதனை நாடகமாக்கி, ''இது செய்யக் கூடாது; இது செய்ய வேண்டும்'' என்று தெரிந்து கொள்ளச் செய்வது பிறிதொரு முறை.

திருமாலும், சிவபெருமாலும் பலபல வடிவங்களில் இருந்து நாடகம் நடித்துக் காட்டினர்கள். சில சமயங்களில் சிவன் பெரியவனுகவும், சில சமயங்களில் திருமால் பெரிய வனுகவும் காட்டுவார்கள். நாடக வேஷத்தில் அப்படித் தோற்றுமேயொழிய உண்மையில் இருவரும் வெவ்வேறு அல்லர் என்ற உண்மையை எண்ணிச் சமரச உணர்ச்சி பெற வேண்டும். இது ஒரு கருத்து.

மற்ருென்று: திருமாலும், பிரமனும் தாமே பெரியவர் என்று அகங்கரித்தபோது முடிவு கட்டுவதற்குச் சிவபெரு மான் சுடராக நின்ருர். அந்தச் சுடரை அளவெடுக்க எண்ணிய இரண்டு பேரும் விலங்காகவும், பறவையாகவும் ஆனுர்கள். செய்யத் தகாத ஒன்றை மிகச் சிறந்தவர் எண்ணினுலும் அப்போதைக்கு அவர் விலங்கின் நிலையை அடைகிருர் என்ற உயர்ந்த நீதி இதிலிருந்து கிடைக்கிறது. அகங்கரித்ததோடு நிற்காமல் அளவெடுக்கப்படாத ஒன்றை அளவெடுக்கப் புகுந்த அறியாமையினல் ஒருவர் பன்றியாக வும், மற்ருெருவர் பறவையாகவும் ஆகிவிட்டார் அல்லவா?

மற்ருென்று : உயர்ந்தவர்கள் தாழ்ந்து போனுலும் அதிலேயும் ஓர் உயர்வு இருக்கும். திருமால், பிரமன் ஆகிய இரண்டு பேரில் திருமால் உயர்ந்தவர். ஆண்டவனது அடிமுடி காணும் முயற்சியில் சிறந்தது இறைவனுடைய அடியைக் காண்பது. திருமால் இயல்பாகவே உயர்வானவர்; ஆதலின் உயர்ந்த செயலாகிய திருவடியைக் காணும் முயற்சியில் ஈடுபட்டார்.

### பொருத்தம்

இனி இங்கே அருணகிரியார் இந்த வரலாற்றைச் சொல் வதற்குக் காரணம் என்ன என்பதை ஆராய வேண்டும்.

தொல்லைப் பெருநிலம் சூகரமாய்க்
கீன்ருன்

என்று பாடுகிறார் அருணகிரியார். மிகப் பழைய பூமியைப் பன்றி உருவம் எடுத்துப் பிளந்து உள்ளே போனார் என்று சொல்கிறார். சிவபரஞ்சுடரின் திருவடியைக் காண்பதற்காகத் திருமால் செய்த காரியம் இது. ஏன் அப்படிச் செய்தார்? அவர் எவ்வளவு பெரியவராக இருந்தாலும், யான் என்னும் அகந்தை அவர் உள்ளத்தைக் கப்பிக்கொண்டது. அகங்காரம் யாருக்கு வந்தாலும் அதனால் அறியாமை மிகுமேயொழிய ஒளியைக் காணும் அறிவு தட்டுப்படாது என்ற கருத்தைத் திருமால் நாடகம் போட்டுக் காட்டினார். யான் என்னும் அகந்தை போகவேண்டும். அதனால்தான் இன்பம் வரும் என்பதைச் சொல்ல வந்த இந்தப் பாட்டில், அந்த அகந்தையினால் உண்மையைக் காண முடியாமல் தடுமாறிய திருமாலின் கதையை எடுத்துச் சொல்வது பொருத்தம் அல்லவா? உயர்ந்தவர் குற்றம் பண்ணினாலும் அது குற்றமே என்பதைத் திருமால் தம்முடைய செயலால் காட்டினார்.

**யான்தான் எனும்சொல் இரண்டும்கெட்**
**டால்அன்றி யாவருக்கும்**
**தோன்றாது; சத்தியம்; தொல்லைப்**
**பெருநிலம் சூகரமாய்க்**
**கீன்றான் மருகன் முருகன்**
**க்ருபாகரன் கேள்வியினால்**
**சான்றுஆரும் அற்ற தனிவெளிக்**
**கேவந்து சந்திப்பதே.**

(பழைய பெரிய பூமியை வராக உருவம் எடுத்து இறைவனுடைய அடியைத் தேடிக்கொண்டு பிளந்து சென்ற திருமாலுக்கு மருகனும் முருகனுமாகிய அருளாளன் வேறு சாட்சியாக யாரும் இல்லாத தனி வெளிக்கு வந்து நம்மைச் சந்திப்பது யான் தான் என்னும் வேறுபாட்டைக் காட்டும் இனச்சொற்கள் இரண்டும் கெட்டாலன்றி வெறும் கேள்வியினால் தோன்றாது.

கெட்டால் அன்றிச் சந்திப்பது கேள்வியினால் தோன்றாது.

யான் தான் என்னும் சொல் இரண்டும் இனமானவை. அந்தச் சொல்லைச் சொல்லும் நிலை பேதநிலை. சொற்கேட்டு :யானும் தானும் ஒன்றுவதே லட்சியம். தோன்றுது என்பது சித்தியாது என்ற பொருளுடையது. தொல்லை—பழமையான. சூகரம்—பன்றி. கீன்றான்—கீண்டான்; அகழ்ந்த திருமால். சான்று—சாட்சி. ஆரும் அற்ற என்றாலும் ஒரு தத்துவமும் அற்ற என்பதே கருத்தாகக் கொள்க. தனி வெளி—சிதாகாசம்; இதையே பாழென்றும் சூனியமென்றும் சொல்வர்.)

அகந்தை உள்ள வரையில் அநுபவம் கிடைக்காது என்பது கருத்து.

இது கந்தர் அலங்காரத்தின் 95-ஆவது பாட்டு.

# இடம் கடந்த மயில்

## அங்கங்கள்

பழங்காலத்து அரசர்களைப் பற்றிச் சொல்லும்போது அங்கரங்க வைபவம் உடையவர்கள் என்று சொல்வது வழக்கம். பல வகையான அங்கங்களைக் கொண்டு தம்முடைய செல்வச் சிறப்பு விளங்கும்படியாக வாழ்வது அந்த அரசர்களுடைய இயல்பு. நாடு, ஊர், ஊர்தி, மாலை, ஆயுதம், சேனை, கொடி, முரசு, பேர், ஆணை ஆகிய பத்து அங்கங்களைத் தசாங்கங்கள் என்று சொல்வார்கள், சாங் கோபாங்கம் என்பது மற்றொரு மொழி. அங்கமும், உபாங்கமும் சேர்ந்து அமைந்தது என்பது அதற்குப் பொருள். அங்கங்கள் மூன்று வகைப்படும். அங்கம், உபாங்கம், பிரத்யங்கம் என்பன அவை. கை ஓர் அங்கம். கையிலுள்ள விரல் அங்கத்திற்கு அங்கம்; அல்லது உபாங்கம். ஒருவரைக் கையால் அடிக்கிறோம். விரலினால் தொடுகிறோம். இவை அங்க உபாங்களின் வேலை. வேறு சில சமயங்களில் தடியை எடுத்து அடிக்கிறோம். அந்தத் தடி பிரத்யங்கம்; அங்கத்திற்குப் பிரதிநிதியாக இருந்து உதவுவது. அரசன் பல அங்கங்களை உடையவனாக இருக்க வேண்டும்.

## வாகனம்

சிறந்த அரசனுக்கு வாகனம் இன்றியமையாதது. அந்த வாகனத்திற்குத் தனிச் சிறப்பு உண்டு. பெரும்பாலும் தெய்வங்களுக்குத் தனித்தனியே வாகனங்கள் இருப்பதைப் புராணங்கள் சொல்கின்றன. சிவபெருமான் விடையின்மேல்

வருபவர். திருமால் கருடன்மேல் வருபவர். பிரமனுக்கு அன்னம் வாகனம். இந்திரன் ஐராவதம் என்னும் வாகனத்தில் வருபவன். வருணன் மகரமீனை வாகனமாக உடையவன். இப்படியே அந்த அந்தத் தேவருக்கு ஏற்ற வாகனங்களைப் புராணக் கதைகள் சொல்கின்றன. முருகன் சிறந்த தலைவன். எல்லாத் தேவர்களுக்கும் மேலான தெய்வம். அவனுக்கும் வாகனம் இருக்கிறது. வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு வாகனங்களில் அவன் வந்தாலும் அவனுக்கு முக்கியமான வாகனம் மயில். அவன் மயில் ஏறும் பெருமாள்.

## இரு வகைப் புகழ்

யாரேனும் ஒரு தலைவனைப் பாடவேண்டுமானால் அவனை மட்டும் பாடிக்கொண்டிருப்பது போதாது. அவனுடைய அங்கங்களைப் பாடவேண்டும். உபாங்கங்களைப் புகழவேண்டும். பிரத்யங்கங்களைப் பாராட்டிப் பேசவேண்டும். அவனுடைய அங்க வகைகளை எல்லாம் பாராட்டுவது அவனைப் பாராட்டுவதற்குச் சமந்தான். இதை நினைத்தே அருணகிரியார் கந்தர் அநுபூதியின் முதல் பாட்டில்,

> "ஆடும் பரிவேல் அணிசே வலெனப்
> பாடும் பணியே பணியாய் அருள்வாய்"

என்று வேண்டிக்கொண்டார். முருகனோடு தொடர்புடைய பொருள்களைப் பாராட்டும்போது அவற்றுக்குள்ள பெருமையைத் தனியே சொல்வதில்லை. முருகனுடைய பெருமையையும் இணைத்துச் சொல்வார். பாலைத் தனியே உண்ணுகிறோம். பாலைக் கொண்டு செய்த பணியாரங்களை உண்ணும்போதும் பாலை உண்கிறோம். அப்படியே தலைவன் புகழை நேரே சொல்வது ஒருவகை. அவனோடு சேர்ந்த பொருள்களைச் சிறப்பித்து அவனைப் புகழ்வது ஒரு வகை. இரண்டும் தலைவன் புகழைச் சொன்னவையே ஆகும்.

**மயிற் பாட்டு**

அருணகிரியார் முருகப்பெருமானுடைய மயிலையும், வேலையும், சேவலையும் பல இடங்களில் பாராட்டியிருக்கிறார். திருவகுப்பு என்னும் நூலில் வேலையும் மயிலையும் தனித்தனி வகுப்புகளால் பாராட்டுகிறார். கந்தர் அலங்காரத்தில் மயிலைப் பாராட்டிய சில பாடல்களை முன்பு நாம் பார்த்திருக்கிறோம். இப்போது வேறு ஒரு மயில் பாட்டைப் பார்க்கலாம்.

இந்தப் பாட்டு மயிலையே முன்னிலைப்படுத்திப் பாடுவது. "மயிலே, உன்னுடைய மனம் போனபடி உன்னை விட்டுவிட்டால் நீ இப்படி எல்லாம் செய்வாயே!" என்று பாராட்டும் முறையில் இந்தப் பாட்டு அமைந்திருக்கிறது.

**கொற்றவேள் மயில்**

எடுத்தவுடன்,

**தடக்கொற்ற வேள் மயிலே!**

என்று அழைக்கிறார். முருகப்பெருமானுக்கு உகந்த வாகனமாகிய மயில் அது. அப்பெருமான் எப்போதும் வெற்றியோடு இருப்பவன். அவன் வெற்றி விரிந்தது; விசாலமானது; தடக்கொற்றம் அது. அந்த வெற்றியில் அவனோடு சேர்ந்தவர்களுக்கும் பங்கு உண்டு. போரில் தலைசிறந்து நின்ற பகைவர்களை அழித்த முருகப்பெருமான் மயில் வாகனத்தின் மேலேறிச் சென்று அந்தக் காரியத்தைச் செய்தான். அப்போது பகைவர் அஞ்ச நடையிட்டுச் சென்ற ஆற்றலுடையது அந்த மயில். 'தாவடியோட்டும் மயில்' என்று அந்த நிலையைத்தான் முன்பு குறிப்பிட்டார். ஆகவே ஆண்டவன் பெற்ற வெற்றியில் மயிலுக்கும் பங்கு உண்டு. இதை நினைத்து, 'தடக்கொற்ற வேள் மயிலே' என்றார். விரித்த கொற்றம் வேளுக்கும் உரியது; ஓரளவு மயிலுக்கும் உரியது. ஆதலின், தடக்கொற்ற வேள் என்று முருகனுக்கு அடை

யாகவும், தடக்கொற்ற மயில் என்று மயிலுக்கு அடையாக வும் இரண்டு வகையிலும் கூட்டிப் பொருள் கொள்ளலாம்.

மயில் அழகியது. பார்த்தவர்கள் கண்ணைப் பறிக்கும் பேரழகு பெற்ற பறவை அது. அதற்கு இயற்கையாகவே ஒரு கவர்ச்சியிருக்கிறது. முருகப்பெருமானுடைய சம்பந்தத்தால் அதனுடைய பெருமை பன்மடங்கு உயர்ந்து விட்டது.

## சேவல்

தொல்காப்பியத்தில் ஒரு சூத்திரம் வருகிறது. அது பறவைகளின் பெயர்களை வரையறுத்துச் சொல்வது. 'சிறகு டைய பட்சிகளில் ஆண்களுக்கு எல்லாம் சேவல் என்னும் பெயர் பொருந்தும். ஆனால் மயில் அல்லாத மற்றப் பறவை களுக்குத்தான் அந்தப் பெயர் உரியது' என்று அச்சூத்திரம் சொல்கிறது.

"சேவற் பெயர்க்கொடை சிறகொடும் சிவணும்
மாயிருந் தூவி மயிலலங் கடையே"

என்பது அச்சூத்திரம். சேவல் என்ற சொல் வன்மையைக் காட்டுவது. மயிலோ மென்மையையுடையது. ஆண்மயிலாக இருந்தாலும் அதன் மென்மை மாறுவது இல்லை. அந்த மென் மையைக் கருதியே வன்மையைக் குறிப்பதாகிய சேவல் என் னும் சொல்லை அதற்குச் சொல்லக் கூடாது என்று வகுத்தார் தொல்காப்பியர். ஆனால் இந்தச் சூத்திரத்திற்கு உரை எழுத வந்த பேராசிரியர் ஒரு சிறிய விலக்கைச் சொன்னார். 'செவ் வேள் ஊர்ந்த மயிற்காயின் அதுவும் நேரவும் படும்' என்று எழுதினர். மிக்க வீரமுடைய முருகப்பெருமான் ஊர்ந்து வரும் மயிலானால் சேவல் என்ற பெயரை அதற்கும் சொல் லலாம் என்பது பொருள். இதை மனத்தில் வைத்துக் கொண்டு சில உரையாசிரியர்கள் சேவற்கொடி என்று வரும் போது மயில் கொடி என்று பொருள் எழுதுவார்கள்.

## வீர நடையும் ஈர நடையும்

முருகன் மயிலின்மேலே வீரச் செயல் செய்யும் போதும் ஊர்ந்து வருவான்; ஈரச் செயல் புரியும்போதும் ஊர்ந்து வருவான். மயிலுக்கு இரண்டு வகையான நடை உண்டு. யும் அசுரர்களை அச்சுறுத்துகின்ற மிடுக்கு நடையுமுண்டு; தொண்டர்களுக்கு நலம் தரும் அழகு நடையும் உண்டு. போர்க்களத்தில் பகைவர்களைப் பொருது வெற்றி அடையச் செல்லும் போது ஆண்டவன் மயிலை ஊர்ந்து செல்வான்; தொண்டர்களுக்கு அருள் செய்யச் செல்லும் போதும் நீலச் சிகண்டியில் ஏறிச் செல்வான். ஆகவே வீர நடையும், ஈர நடையும் பொருந்தியது மயில் என்று தெரிந்துக்கொள்ள வேண்டும். இங்கே அதனுடைய வீரத்தை எண்ணி, 'தடக்கொற்ற வேள் மயிலே' என்ருர்.

தொண்டர்கள் மயிலை அநுகூலமான தன்மை யுடையது என்று பாராட்டுவார்கள்.

"திந்திமி தோதி தீதித் தீதி
தந்ததன தானத் தானத் தான
செஞ்சணகு சேகு தாளத்தோடு—நடமாடும்
செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்கஅநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில்"

என்று திருப்புகழில் வருகின்றது.

தோகையை விரித்து வருகின்ற மயில் ஓங்கார உருவத்தை நினைப்பூட்டுகின்றது. அதைக்கொண்டு,

"ஆன தனிமந்த்ர ரூப நிலைகொண்ட
தாடும்மயில் என்ப தறியேனே"

என்று அருணகிரியார் பாராட்டுவார்.

இப்போது பார்க்கப்போகும் பாடலில் அருணகிரியார் மயிலின் பெருமையை வேறு ஒரு விதத்தில் சொல்ல வருகிருர்.

"தடக்கொற்ற வேள்மயிலே. எல்லோருடைய இடர் களையும் தீர்க்கும் இயல்புடைய உன்னை ஆண்டவன் மேலே ஊர்ந்து செல்லாமல் உன் விருப்பப்படியே விட்டுவிட்டால் நீ என்ன செய்வாய் தெரியுமா?" என்று கேட்டு விடை சொல்வது போலச் சொல்கிறார்.

## மேருவுக்கும் அப்பால்

தடக்கொற்ற வேள் மயிலே, இடர் தீரத்
தனிவிடின் நீ.

அதற்கு மேல் என்ன நடக்கும் என்பதைத் தம்முடைய கற்பனையால் சித்திரித்துப் பார்க்கிறார். மயிலுக்கு ஆனந்தம் உண்டானால் அது முதலில் தனது தோகையை விரித்து நடமாடத் தொடங்கும். முருகப்பெருமான் ஏறும் மயிலோ மிக விரிந்தது; மிகப் பெரியது. அது தன்னுடைய தோகையை வட்டமாக விரித்து நின்றால் அந்தத் தோகையின் அகலம் வடக்கே உள்ள மேருமலையையும் தாண்டிச் செல்லுமாம்.

வடக்கில் கிரிக்கு அப்புறத்தும்
நின் தோகையின் வட்டமிட்டு.

பூமிக்கு நடுவில் இருப்பது மேரு கிரி, அது நம்முடைய நாட்டுக்கு வடக்கே இருக்கிறதாம். இப்படிப் புராணம் சொல்கிறது. பூமிக்கு ஓர் அச்சு வேண்டும் அல்லவா? அந்த அச்சுத்தான் மேரு. அதன் உச்சியில் தேவர்கள் வாசம் செய்வதால் அதனைச் சுராலயம் என்று சொல்வார்கள். மேரு மலையைச் சுற்றிச் சந்திரனும் சூரியனும் சுற்றுகிறார்கள் என்பது புராண வரலாறு. இவைகள் எல்லாம் பழங்காலத்தில் ஏதோ ஒரு கருத்தை உள்ளடக்கிச் சொன்ன செய்திகள், உலகத்துக்கு மையமாகவும், ஆகர்ஷண சக்திக்கு மூலமாகவும் உள்ளது மேரு. அதையே பொன்மலையாகக் கொண்டாடினார்கள். இப்போது மயிலைப் பாராட்ட வந்த அருணகிரியார் தம்முடைய கற்பனையால் அது மேரு மலைக்குஅப்புறமும் தன் தோகையை வட்டமாக விரித்துக் கொண்டிருப்பதைக் காட்டுகிறார்.

வடக்கில் கிரிக்கு அப்புறத்தும்
நின் தோகையின் வட்டமிட்டு,

பூமி முழுவதையும் தன்னுடைய தோகை நிழலால் அமைத்துக்கொண்டு, அதற்கு அப்பாலுள்ள மேருவையும் கடந்து அது நிற்கிறது. பூமிக்கு அப்பால் இருப்பது கடல். மயில் மேருவைக் கடந்து அதற்குமேலும் போகிறதாம். பூமியின் எல்லேயாக உள்ள கடலேயும் தாண்டி அதற்கு அப்பாலும் போகிறது. நமக்கு நிலமும் கடலுமே தெரிகின்றன. நாட்டைக் கடந்து, மேரு மலேயைக் கடந்து, பூமியைக் கடந்து, அப்பாலுள்ள கடலேயும் கடந்து சென்றுவிட்டது மயில். அதோடு அது நின்று விடுகிறதா? இல்லே; பூமியைக் கடந்து, சென்ருல் அதற்குப் பிறகு பல கோள்கள் உள்ளன. மயில் போகிற வேகத்தில் அந்தக் கோள்கள் எல்லாம் இடையில் நின்று விடுகின்றன. எல்லாக் கோள்களுக்கும் அம்பால் நெடுந்தூரத்தில் உள்ளது சூரியன். வெகுவேகமாகப் போன மயில் பூமியின் ஈர்ப்புச் சக்திக்கு அப்பாலே சென்று வெளியெல்லாம் கடந்து கதிர வனுக்கு அப்புறமும் சென்று விடுகிறதாம்.

### சக்கரவாளம்

நாம் காணுகிற நட்சத்திரங்கள் எல்லாம் தனித்தனியே ஒவ்வொரு சூரியனுக இருப்பவை என்று விஞ்ஞானிகள் கூறுகிருர்கள். அகண்ட வெளியில் அந்தக் கோளங்கள் எல்லாம் பந்துகளேப்போல மிதக்கின்றன. சூரியனே மையமாக வைத்துக் கிரகங்கள் அதைச் சுற்றிக் கொண்டே இருக்கின்றன. நாம் வசிக்கும் பூமி, நாம் காணும் சூரியனேச் சுற்றி வருகின்ற உருண்டை. இது போலவே ஒவ்வொரு நட்சத்திரமும் ஒவ்வொரு சூரியனுனல் அந்த அந்தச் சூரியனேச் சுற்றி உலவுகின்ற கிரகங்களும், கோளங் களும் பலப்பலவாக இருக்கும். இப்படியுள்ள அண்டங்களே எல்லாம் கணக்கு எடுத்துப் பார்க்க முடியாது. விஞ்ஞானிகள் மிக நுட்பமான தொலேநோக்கிக் கண்ணுடிகளேக் கொண்டு

பல நட்சத்திரங்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஆனால் அவற்றோடு நட்சத்திரக் கணக்குத் தீர்ந்தது என்று அவர்கள் சொல்வதில்லை. 'இன்னும் இந்தக் கூட்டங்களைப் போல எத்தனை எத்தனையோ நட்சத்திரங்கள் இருக்கலாம். அவற்றை எல்லாம் இப்போது காண முடியவில்லை' என்று சொல்கிறார்கள். அறிந்ததைவிட அறியாதன அதிகம் என்பது உண்மையான அறிவாளிக்குப் புலனாகிறது. அந்த வகையில் இன்று பல நட்சத்திரங்களைக் கண்டுபிடித்த விஞ்ஞானிகள் இன்னும் நுட்பமான கருவிகளை உண்டாக்க உண்டாக்க, இன்னும் பல நட்சத்திரங்களைக் காணும் வாய்ப்பு இருக்கிறது என்றே சொல்லுகிறார்கள்.

பூமி உருண்டையாக இருக்கிறது; எப்பொழுதும் சுழன்று கொண்டே இருக்கிறது. இதைச் சுற்றி நெடுந்தூரம் வரைக்கும் இதன் ஆகர்ஷண சக்தி உள்ளது. இப்படியே ஒவ்வொரு கிரகமும் அதனைச் சுற்றிப் படர்ந்திருக்கும் ஆகர்ஷண சக்தியோடு சுழன்றுகொண்டிருக்கிறது. 'ஒன்றன் ஆகர்ஷண சக்தியின் எல்லையைக் கடந்தால் வேறு ஒன்றன் ஆகர்ஷண சக்தியில் அகப்படுவோம். இப்படி அமைந்திருக்கிற கிரகங்கள் எல்லாம் ஒரு பெரிய வெளியில் சுழலுகின்றன. எந்தக் கிரகத்தின் ஆகர்ஷணசக்தியும் இல்லாத ஒரு பெரு வெளி உண்டு. அந்தப் பெருவெளியும் இந்தக் கிரகங்களைச் சுற்றி வட்டமாக இருக்கும். அதனை உலகப்புறச் சக்கர வாளம் என்று சொல்வார்கள். புராணம் அப்படி ஒரு மலை இருப்பது போலச் சொல்கிறது. எல்லாக் கிரகங்களுக்கும் அப்பாலே உள்ள வெளிவட்டம் எதுவோ அதுவே சக்கர வாளம் என்று கொள்ளலாம்.

மேருவைத் தாண்டிச் சென்ற மயில் கடலையும்தாண்டிச் சென்று, பிறகு கதிரவனையும் தாண்டிச் சென்றது. அப்பால் எல்லாக் கோளங்களுக்கும் சுற்று எல்லையாக உள்ள ஈர்ப்புச் சக்தியற்ற புறவெளியாகிய சக்கரவாளத்தை அடைந்தது. அதோடு நின்றதா? அதற்கு மேலேயும் அது போயிற்றாம்.

வடக்கில் கிரிக்கு அப்புறத்தும் நின் தோகையின்
வட்டமிட்டுக்
கடற்கு அப்புறத்தும் கதிர்க்கு அப்புறத்தும்
கனகசக்ரத்
திடர்க்கு அப்புறத்தும் திசைக்கு அப்புறத்தும்
திரிகுவையே.

### திசைக்கு அப்புறம்

எல்லைகள் இரண்டு வகைப்படும்: இட எல்லை, கால எல்லை என்று. இடத்திற்குக் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்று நான்கு வேறுபாடுகள் உண்டு. இடம் உள்ள மட்டும் இந்தத் திசையின் பாகுபாடும் உண்டு. பூமியின் எல்லையைக் கடந்து, ஆகர்ஷண சக்தி கொண்ட பல கோளங்களின் எல்லைகளையும் கடந்து புறவெளி மட்டும் சென்ற மயில் அந்த எல்லையையும் கடந்து விடுகிறதாம். திசை என்ற வரையறை கொண்ட இடத்தையும் தாண்டிச் சென்றுவிடுகிறது.

திசைக்கு அப்புறத்தும் திரிகுவையே.

### இடம் கடந்த இடம்

இப்படிச் சிறிய எல்லைகளை எல்லாம் கடந்து, பிறகு பெரிய எல்லைகளையும் கடந்து எல்லையிறந்த ஓரிடத்தில் நிற்கிறது. கோயிலுக்குள்ளிருந்து ஒருவன் வெளியில் வந்து, முதல் பிராகாரத்தைத் தாண்டி, இரண்டாம் பிராகாரத்தையும் தாண்டி, ஏழு திரு மதில்களையும் தாண்டி, கடைசியில் வெளியில் வத்துவிடுவதுபோல இந்தமயில் செய்கிறது. அதாவது இடம் கடந்த எல்லையில் அது திரிகிறதாம்.

தடக்கொற்ற வேள்மயி லேஇடர் தீரத் தனிவிடின் நீ
வடக்கில் கிரிக்கு அப்புறத்தும்நின் தோகையின்
வட்டமிட்டுக்

கடற்குஅப் புறத்தும், கதிர்க்குஅப் புறத்தும்
கனகசக்ரத்
திடர்க்குஅப் புறத்தும், திசைக்குஅப் புறத்தும்
திரிகுவையே.

இப்படி அலங்காரமாக மயில் செய்வதை ஓர் ஓவியம் போலக் காட்டினுர் அருணகிரிநாதர். இவ்வாறு கற்பித்துச் சொல்வதில் என்ன நயம் என்ற கேள்வி எழலாம். மயிலின் பெருமையைச் சொன்னதாக இந்தப் பாட்டு இருந்தாலும் இறைவனுடைய தொடர்பு உடையவர்களுக்கு எத்தனை ஆற்றல் உண்டாகும் என்பதை இது உள்ளுறையாகக்கொண் டிருக்கிறது.

## இருவகை எல்லை

மயில் ஆண்டவனுக்கு வாகனமாக அவனேடு ஒட்டி நிற்பது. இறைவன் கால எல்லே, இட எல்லேயாகிய இரண் டையும் கடந்தவன். நாமோ அந்த எல்லேக்கு அகப்பட்டவர் கள். இடம் காலம் ஆகிய இரண்டின் எல்லேகளும் நமக்கு இப்போது புலப்படுவதில்லே. காலமும், இடமும் கூட எல்லே கடந்தவையே என்று நாம் நினேத்துக்கொண்டிருக்கிறேம். கடவுள் ஒருவன்தான் காலதேச பரிச்சின்னத்திற்கு அகப் படாதவன்; எந்த விதமான எல்லேயும் இல்லாதவன். காலத் திற்கும் எல்லே உண்டு; இடத்திற்கும் எல்லே உண்டு.

அந்த எல்லே நமக்கு எப்படித் தெரியும்? ஒரு வீட்டுக்கு உள்ளேயிருந்து பார்த்தால் அதன் புற எல்லே நமக்குத் தெரி யாது. அந்த வீட்டை விட்டு வெளியே வந்தால் அதன் எல்லே நமக்குத் தெளிவாகத் தெரியும். கால எல்லேக்கும், இட எல்லேக்கும் அகப்பட்ட பிரபஞ்ச வாழ்விலே நாம் இருக்கும் மட்டும் அவற்றின் முடிந்த எல்லேகள் நமக்குப் புலப்படா. அந்த எல்லேயைக் கடந்து சென்ருல் காலத்தின் எல்லேயையும், இடத்தின் எல்லேயையும் நாம் தெரிந்து கொள்ளலாம்.

## எல்லை கடந்த இன்பம்

நாமாக முயன்று இந்த எல்லையைக் கடப்பது என்பது முடியாத காரியம். இந்த எல்லையைக் கடந்து நிற்கும் ஆண்டவனைச் சார்ந்தால் நாமும் அவனோடு சேர்ந்து எல்லையைக் கடந்த இன்பத்தில் நிலை நிற்போம். ஒரு சிறிய பருக்கைக் கல்லை ஒரு குளத்தில் போட்டால் அது குளத்தில் ஆழ்ந்துவிடுகிறது. இரண்டு டன் எடை உள்ள ஒரு பாறையை அந்தக் குளத்தின்மேல் மிதக்க வைக்க முடியுமா? முடியாது. ஆனால் அந்தக் காரியத்தையும் யாவரும் அதிசயிக்கும்படி செய்து காட்டலாம். எப்படி? தண்ணீரின் மேல் மிதக்கின்ற ஒரு பெரிய கட்டையில் அந்தப் பாறையை வைத்தால் அது தண்ணீரின்மேல் மிதக்கும். சிறிய கல் கூடத் தண்ணீரில் அமிழும்போது அவ்வளவு பெரிய பாறை தண்ணீரில் மிதக்கிறதே என்று அறியாதவர்கள் ஆச்சரியப் படலாம். அந்தக் கல் தானாக மேலே மிதக்கவில்லை. தண்ணீரின்மேல் மிதக்கும் இயல்புடைய கட்டையைச் சார்ந்ததனால் அது மிதக்கிறது. அதுபோல் கால, எல்லைக்கும் இட எல்லைக்கும் அகப்பட்ட நாம் அந்த இரண்டு எல்லைகளையும் தாண்ட முடியாது. அந்த எல்லைகளைக் கடந்து நிற்கும் ஆண்டவனை அடைந்தோமாயின் அவனுடைய சார்பினால் காலத்தையும், இடத்தையும் வென்று அந்த எல்லைகளைக் கடந்த பெருவெளியில் இன்பம் நுகர்ந்திருப்போம்.

## கருத்து

இந்தக் கருத்தையே இங்கே மயிலின்மேல் வைத்து அருணகிரியார் சொல்கிறார். இறைவனுடைய சம்பந்தத்தால் மயில் இட எல்லையையும், கால எல்லையையும் தாண்டிற்று. மயில்மேல் ஏறும் பிரானை அறிந்தவர்கள் காலத்தை வென்றிருப்பார் என்று ஒரு பாட்டு முன்னே கந்தர் அலங்காரத்தில் வந்திருக்கிறது.

"நீலச் சிகண்டியில் ஏறும் பிரான்எந்த நேரத்திலும்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன

சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்மரிப் பார்வெறும் கர்மிகளே''

என்ற பாட்டு அது. இறைவனுடைய செயலை அறியும் யோகிகளே காலத்தை வென்றிருப்பார்கள். பின்பு அவர்கள் கால எல்லையைக் கடந்து இன்பம் பெறுவார்கள். இதனைச் சொல்லும்போது முருகப்பெருமானை,

''நீலச் சிகண்டியில் ஏறும் பிரான்''

என்றார். காலங் கடந்தவன் எம்பெருமான். அவனைச் சார்ந்த நீலச் சிகண்டியும் காலம் கடந்தது. இங்கே அந்த மயில் இடமும் கடந்தது என்று சொல்ல வருகிறார். நாம் காணும் இடமாகிய நாட்டைக் கடந்து, பூமியைக் கடந்து, மேருவைக் கடந்து, பின்பு கடலைக் கடந்து, நாம் காணும் பொருளாகிய கதிரவனைக் கடந்து, நாம் காணப் பொருளாகிய கனக சக்ரத்திடரையும் கடந்து, கடைசி எல்லையாகிய திசையையும் கடந்து நிற்கும் மயில் என்று சொல்கிறார்.

மயிலின்மேல் வைத்துச் சொன்னாலும், ஆண்டவன் திருவருளைப் பெற்ற ஆன்மாக்கள் இட எல்லையைக் கடந்து இன்பத்தைப் பெறும் என்று சொன்னதாகவே இதற்குப் பொருள் கொள்ளவேண்டும். சின்ன இடத்தைக் கடந்த பிறகு பெரிய இடத்தைக் கடப்பது இயற்கைதான். அளவு படாத ஆண்டவனை அண்டின ஆன்மாவும் அளவு படாத நிலையில் அளவுபடாத இன்பத்தை அடையும். மயிலைப் போல அவனுடைய அணிமையைப் பெற்றால் காலம் கடந்து, இடமும் கடந்து நிற்கும் பேரின்ப நிலையை அடையலாம்.



தடக்கொற்ற வேள்மயி லேஇடர்
தீரத் தனிவிடின்நீ
வடக்கில் கிரிக்குஅப் புறத்தும்நின்
தோகையின் வட்டமிட்டுக்

கடற்குஅப் புறத்தும், கதிர்க்குஅப்
புறத்தும், கனகசக்ரத்
திடர்க்குஅப் புறத்தும், திசைக்குஅப்
புறத்தும் திரிகுவையே.

[விரித்த வெற்றியையுடைய முருகப் பெருமானுக்குரிய வாகனமாகிய மயிலே, இடர் தீரும்படியாக உன்னைத் தனியே விட்டுவிட்டால், நீ வடக்கில் உள்ள மேருமலைக்கு அப்புறத்தும், உன்னுடைய தோகையை விரித்து வட்டமிட்டுக் கடல்களுக்கு அப்புறத்தும், சூரியனுக்கு அப்பாலும், பொன்னிறமாகிய உலகப்புறச் சக்கரவாளகிரிக்கு அப்பாலும், திசைகளுக்கு அப்பாலும் சென்று திரிவாய்,

தட—விசாலமான. கொற்றம்—வெற்றி; அரசுரிமையும் ஆம். வடக்கில் கிரி—மேருமலை. தோகை—மயிலின் வால். கதிர்—சூரியன். திடர்-மேடு; இங்கே மலை. சக்ரத்திடர்—சக்கரவாள கிரி.]

மயில் இடங்கடந்து உலவும் தன்மையுடையது என்பது கருத்து.

இது கந்தர் அலங்காரத்தில் 96-ஆவது பாட்டு.

# சேடன் பட்ட பாடு

மயிலினது பெருமையைச் சொன்ன அருணகிரி நாதர் மறுபடியும் ஒரு கற்பனைக் காட்சியைக் காட்டி, அதன் பெருமையைப் பின்னும் விரிக்கிறார். அருணகிரிநாதருக்குத் திருச்செங்கோட்டில் ஒரு தனி அன்பு உண்டு. வேறு எந்தத் தலத்தையும் வைத்துப் பாடாத கந்தர் அநுபூதியில்,

"நாகாசல வேலவ"

என்று பாடினார். இதற்குரிய காரணத்தை முன்பு ஒரு சொற் பொழிவில் சொல்லியிருக்கிறேன். திருச்செங்கோட்டுக்குச் சர்ப்பகிரி, நாககிரி என்ற பெயர்கள் உண்டு. நெடுந்தூரத் திலிருந்து பார்த்தால் ஒரு பாம்பு படுத்திருப்பதுபோலத் தோன்றும். அதற்கு அந்தப் பெயர் வந்ததற்கு அந்தத் தலத்தின் புராணம் ஒரு காரணம் சொல்கிறது.

### புராண வரலாறு

ஒரு சமயம் வாயு பகவானுக்கும், ஆதிசேடனுக்கும் சண்டை உண்டாயிற்றாம். பாம்புக்குக் காற்றுத்தான் உணவு. அகங்காரம் வந்தால் உணவு கொடுப்பவரையும் பகைத்துக் கொள்ளும் நிலை உண்டாகும். இன்றைக்கு அப்படிப் பல கலகங்கள் நடப்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். எல்லாக் காலத்திலும் இத்தகைய கலகங்கள் நிகழ்வது வழக்கந்தான் போலும்! பாம்பு காற்றை உண்ணும் என்று சொல்வார்கள். "காலே மிக உண்டு காலே இலாத கணபணம்" என்று முன்பு அலங்காரத்தில் வந்திருக்கிறது. இப்போது

பாம்பாகிய ஆதிசேடனுக்கும் வாயு பகவானுக்கும் சண்டை மூண்டது. யார் வன்மை உடையவர்கள் என்று சோதிப் பதற்கு ஒருவரோடு ஒருவர் மோதிக்கொண்டார்கள். காற்று வெகுவேகமாக வீசியது. ஆதிசேடன் தன்னுடைய படங்களை விரித்துக்கொண்டு சீறினன். என்ன இருந்தாலும் பாம்பின் உணவாகவும் மூச்சாகவும் விளங்கும் வாயு தோல்வி அடை வானு? ஆதிசேடனின் படங்களை மோதிப் பல பகுதி களாகப் பிய்த்து எரிந்தான். அவை வெவ்வேறு இடங்களில் விழுந்தன. திருக்கோணமலை, திருவேங்கடம், திருச்செங் கோடு முதலிய பல தலங்கள் அப்படி அமைந்தவை என்று புராணங்கள் சொல்கின்றன. அவ்வாறு ஆதிசேடனுடைய தலை விழுந்த இடங்களில் ஒன்று திருச்செங்கோடு. இதை நினைப்பூட்டுவது போல அங்கே அடிவாரத்தில் அதிசேடன் சிலை செதுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு அன்பர்கள் பூசை செய்வதுண்டு.

அந்த நாககிரியாகிய திருச்செங்கோட்டுக்கு அருணகிரி யார் சென்று தங்கினர். பல காலம் அங்கே தங்கி யோகம் பயின்றார். ஒரு நாள் அந்த மலையைப் பார்த்தபோது ஆதிசேடன் உருவம் நினைவுக்கு வந்தது. அந்த எண்ணத்தில் இந்தப் பாட்டைப் பாடத் தொடங்கினர் போலும்!

## குணசீலர் வரலாறு

நெடுந்தூரத்திலிருந்து இந்த மலையைப் பார்த்தால் நாகத்தைப் போலத் தோற்றுகிறதை வைத்துக்கொண்டு எழுந்த பழைய வரலாறு ஒன்று உண்டு.

திருச்செங்கோட்டில் குணசீலர் என்னும் புலவர் ஒருவர் இருந்தார். அவர் முருகனிடத்தில் மிக்க பக்தி பூண்டு வாழ்ந்தார். சிறந்த புலவராகிய அவர் தம்முடைய கவிதையை வடிவேல் பெருமானுக்கன்றி வேறு ஒருவருக்கும் அர்ப்பணம் செய்யக்கூடாது என்ற விரதம்கொண்டிருந்தார். மிகவும் அடக்கமானவர்.

அந்தக் காலத்தில் தென்பாண்டி நாட்டில் ஆழ்வார் திருநகரியில் பிரதிவாதி பயங்கரன் என்றபுலவன் இருந்தான். அவன் மிடுக்காகக் கவி பாட வல்லவன். அதைவிடக் கல்விச் செருக்கு நிரம்பியவன். தன்னுடைய புலமை மிடுக்கினல் தன்னினும் புலமை குறைந்த புலவர்களிடம் சென்று வாதிட்டு, ''நான் உனக்கு அடிமை'' என்று அவர்களிடமிருந்து முறி எழுதி வாங்குவது அவன் வழக்கம். இப்படியே அவன் பல இடங்களுக்குச் சென்று சென்று குறையாகப் படித்த புலவர்களை அடிமையாக்கிக் கொண்டுவந்தான். எந்த ஊருக்குப் போகும் முன்பும் அந்த ஊரிலுள்ள புலவர்களுக்கு அவன் ஓலை அனுப்புவான். முன்பு பலவிடங்களில் அவன் செய்த அட்டகாசத்தைக் கேட்ட புலவர்கள் அவனது ஓலை வந்தவுடனேயே, ''பிரதிவாதி பயங்கரனுக்கு அடிமை'' என்று முறி எழுதிக் கொடுத்துவிடுவார்கள்.

இப்படிப் பலர் அவனுக்கு அடிமையானதனல் அவன் கர்வம் மிக்கது. பாண்டி நாட்டை விட்டுச் சோழநாட்டுக்கு வந்தான். அங்கங்கே, இந்த மிண்டனேடு நமக்கு வாக்கு வாதம் எதற்கு என்று சில புல்வர்கள் அடிமை என்று எழுதிக் கொடுத்தார்கள். வேறு சிலர் எதிரிட்டுச் சொற்போர் புரிந்து தோல்வியுற்றனர். இப்படிச் சோழநாட்டை ஒரு கலக்குக் கலக்கிவிட்டுக் கொங்கு நாட்டுக்கு வந்தான். திருச்செங்கோட்டுக்கு அருகில் வரும் போது அந்த ஊரில் குணசீலர் என்னும் புலவர் இருக்கிறர் என்று உணர்ந்தான். அவர் பெருமை அவனுக்குத் தெரியாது. எல்லோரையும் போல அவருக்கும் வழக்கமாக ஓலையை அனுப்பி வைத்தான்

பிரதிவாதி பயங்கரனது ஓலையைப் பார்த்தவுடன் குணசீலருக்கு மிக்க வருத்தம் உண்டாயிற்று. இறைவன் துணையன்றி வேறு யாரும் துணை இல்லையென்ற உறுதியான எண்ணமுடையவர் அவர். ஆகவே, திருச்செங்கோட்டு வேலனிடம் சென்று, ''எம்பெருமானே! நான் ஒரு பாவமும் அறியேன். ஏதோ ஓரளவு தமிழைக் கற்று, நான் கற்ற கல்வியை உனக்குத்தான் அர்ப்பணித்து வருகிறேன். நான்

புலமை உடையவன் என்றோ, பிறரோடு வாதிட்டு வெற்றி பெறுவேன் என்றோ ஒருநாளும் நினைத்தது இல்லையே! இப்படி இருக்க, என்னிடம் வம்புச் சண்டைக்கு ஒரு புலவன் வருகிறானே! நான் என்ன செய்வேன்? உன்னுடைய திரு வருள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்'' என்று மன முருகி விண்ணப்பம் செய்து கொண்டார். தமக்கு வந்த ஓலையை ஆண்டவனுடைய திருவடியில் வைத்துவிட்டுத் தம் வீட்டுக்குத் திரும்பி விட்டார்.

குணசீலரிடமிருந்து பிரதிவாதி பயங்கரனுக்கு விடை ஒன்றும் வரவில்லை. அதனால் கோபமுற்ற அந்தப் புலவன் அவரோடு வாதிட்டு அவரைத் தோல்வியுறச் செய்ய வேண்டுமென்று எண்ணித் திருச்செங்கோட்டை நோக்கி வந்தான். சிவிகையில் ஏறிக்கொண்டு மாணாக்கர்கள் தொடர்ந்து வர ஆடம்பரமாகத் திருச்செங்கோட்டை அணுகி வந்துகொண்டிருந்தான். அந்த மலையின் பக்கத்தில் அப்போது ஒரு சிறுவன் மாடு மேய்த்துக் கொண்டிருந்தான்.

அந்த இடத்திற்குப் புலவனும், அவனைச் சேர்ந்தவர் களும் வந்தார்கள். அங்கே இருந்த மலையைப் பார்த்தபோது அதன் பெயர் முதலியவற்றைக் கேட்க வேண்டுமென்ற எண்ணம் புலவனுக்கு உண்டாயிற்று. ''இது என்ன மலை?'' என்று அருகில் வந்தவர்களைக் கேட்டான். அவர்கள், ''இது தான் திருச்செங்கோடு; சர்ப்பகிரி என்றும் சொல்வார்கள்'' என்றனர். அந்தப் புலவன் நன்றாக மலையை நிமிர்ந்து பார்த் தான். அது பாம்புபோல இருந்தது. அப்போது அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. ''இது சர்ப்பமானால் இந்தப் பாம்பு ஆடாமல் ஏன் படுத்துக்கிடக்கிறது?'' என்ற கேள்வியைக் கேட்டான். பின்பு அதையே பாட்டாகப் பாடினான். பாதிப் பாட்டாக அந்தக் கேள்வியை வைத்துப் பாடினான்.

''சமர முகத்திருச் செங்கோடு சர்ப்ப சயிலமெனின்
அமரில் படம்விரித் தாடாதது என்னை?''

என்று இரண்டு அடிகள் பாடினுன். அவன் அந்தப் பாட்டை முடிக்கவேண்டுமென்றே தொடங்கினுன். ஆனுல் கேள்வி முடிந்தவுடன் மேற்கொண்டு அவன் அறிவு வேலை செய்ய வில்லை. ''என்னை?'' என்பதற்குரிய விடையாகப் பாட்டின் பிற்பகுதி அமையவேண்டும். திருப்பித் திருப்பி, ''என்னை? என்னை?'' என்று கேட்டான். மீட்டும் மீட்டும்,

''சமர முகத்திருச் செங்கோடு சர்ப்ப சயிலமெனின்
அமரில் படம்விரித் தாடாத தென்னை?''

என்று சொன்னுன். மேலே ஓடவில்லை. இதுகாறும் அத்தகைய கலக்கம் அவனுக்கு வந்ததே இல்லை. மௌன மாகச் சற்று யோசித்தான். பாட்டு நிறைவேறவில்லை. கையை ஆட்டினுன். தலையை ஆட்டினுன். ஆனுல் அவன் அறிவு ஆடவில்லை. எடுத்த பாட்டை முடிக்காமல் திணறிக் கொண்டிருந்தான்.

அப்போது, ''அஃது ஆய்ந்திலையோ?'' என்ற குரல் அவன் காதில் விழுந்தது. இளங்குரலாக அது தோன்றியது. யாவரும் ஒலி வந்த திசையைப் பார்த்தார்கள். அங்கே மாடு மேய்த்துக்கொண்டிருந்த இளைஞன் ஒருவன் தன் கைக்கோலை ஆட்டிக்கொண்டு பாட்டைச் சொல்லிக் கொண்டிருந்தான்.

''அஃது ஆய்ந்திலையோ?
நமரன் குறவள்ளி பங்கன் எழுகரை நாட்டுயர்ந்த
குமரன் திருமுரு கன்மயில் வாகனம் கொத்துமென்றே''

என்று அந்தப் பாட்டின் பிற்பகுதியை இளைஞன் சொன்னுன். எழுகரை நாடு என்பது திருச்செங்கோடு உள்ள சிறிய நாட்டுக்குப் பெயர். கொங்குநாட்டில் இத்தகைய நாடுகள் பல|உண்டு. 'எழுகரை நாட்டிலுள்ள குமரப்பெருமானுடைய வாகனமாகிய மயில், நாம் படம் எடுத்து ஆடினுல் கொத்தி விடுமே என்று அஞ்சி அந்தப் பாம்பு படம் விரித்து ஆடாமல் இருக்கிறது. இது உனக்குத் தெரியாதா?' என்ற கருத்து அந்தப் பாட்டின் பிற்பகுதியில் அமைந்திருக்கிறது. முன்

அமைந்த கேள்விக்கு ஏற்றபடி இந்த விடை இருந்ததனால், கேட்டவர்கள் எல்லோரும் வியப்படைந்தார்கள். பிரதி வாதி பயங்கரனே முகம் வெளுத்துத் தோல்வியுற்றவனைப் போலானான். 'இதுவரைக்கும் நான் பெரும் புலவன் என்று அகங்கரித்தேன். இந்த இளைஞன் நம்மைத் தோல்வியுறச் செய்து விட்டானே! இவன் யார் தெரியவில்லையே!' என்று உள்ளம் மறுகினான். ''அவன் யார், என்று கேளுங்கள்'' என்று அருகிலுள்ள தன் மாணாக்கர்களுக்குச் சொல்ல, அவர்கள் கேட்டார்கள்.

அப்போது அந்த இளைஞன் சொன்னான்: ''நானா? இந்த ஊரில் குணசீலர் என்னும் புலவர் இருக்கிறார். சிறந்த புலமையாளர். ஆனால் அவர் புலவர் என்பதை எளிதில் அறிய இயலாது. அடக்கம் மிகுந்தவர். தாம் பெரும் புலவர் என்பதைப் பிறர் காணத் தம்பட்டம் அடித்துக்கொள்ள மாட்டார். எல்லாம் இறைவன் திருவருள் என்று அடங்கி யிருப்பார். முருகப்பெருமானிடத்தில் அவருக்குள்ள அன்புக்கு எல்லையே இல்லை. அந்தப் பெருமானுடைய சந்நிதானத்தில் நின்று, பொங்கும் வெள்ளம் போலப் பாடுவார்'' என்று இளைஞன் சொல்லிக்கொண்டு வந்தான். பிரதிவாதி பயங் கரனும் இதைக் கேட்டான். ''அது சரி; நீ யார் என்று கேட்டால் என்ன என்னவோ சொல்கிறாயே!'' என்று இடை மறித்தான். ''அதுதான் சொல்ல வருகிறேன். நான் அந்தப் பெருமானிடம் பாடம் கேட்கச் சென்றேன். விரைவில் கவி பாடுவதற்குரிய பழக்கத்தை அவர் சொல்லித் தந்தார். என்னைப் போலப் பல மாணாக்கர்கள் அவரிடம் படித்துப் பெரும் புலவர்களாக இருக்கிறார்கள். ஆனால் எனக்கு விரை வில் கவி பாட வரவில்லை. 'நீ என்னிடம் படித்தது போதும். என் மாணாக்கனாக இருப்பதற்கு உனக்குத் தகுதி இல்லை' என்று சொல்லி என்னைத் துரத்திவிட்டார். பிழைக்க வேறு வழி இல்லாமையினால் இப்போது ஆடுமாடு மேய்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்று அவன் சொன்னான்.

அதைக் கேட்ட பிரதிவாதி பயங்கரத்தின் தலை சுழன்றது. துரத்திவிடப்பட்ட மாணுக்கனே தன்னைத் தோல்வியுறச் செய்துவிட்டான் என்ருல் அந்தப் பெரும்புலவருடைய புலமை எப்படி இருக்கும் என்று எண்ணிப் பார்த்தான். நாம் அந்தப் பக்கமே போகக்கூடாது என்ற தீர்மானத்திற்கு வந்தான். 'இந்த அவமானமே நமக்குப் போதும். அங்கும் போய் அவமானப்படவேண்டாம்' என்று நினைந்தவனுக அந்த மாட்டுக்காரச் சிறுவனிடம், ''அப்பா, என்னுடைய வணக்கத்தை அந்தக் குணசீலரிடம் போய்த் தெரிவி'' என்று சொல்லிச் சிவிகையைத் திரும்பிக் கொண்டு வந்த வழியே போய்விட்டான். முருகன் இப்படி ஓர் அற்புதத்தைச் செய்தான் என்ற கதை ஒன்று வழங்குகிறது. அதனைக் கொங்குமண்டல சதகம் ஒரு பாட்டில் எடுத்துச் சொல்கிறது.

> ''பெருமை மிகும்அர வச்சிலம் பாமெனின் பெட்புறும்அவ்
> வரவு படம்விரித் தாடா தது என்னென் றகத்துனுமோர்
> கருவி வெருக்கொள ஆமேய்ப்பவனுக் கனிந் திரு
> மருகன் மயில்கொத்தும் என்றெனச் சொல்கொங்குமண்டலமே.''

இந்தக் கதை எனக்கு இங்கே நினைவுக்கு வந்ததற்குக் காரணம்: திருச்செங்கோடு ஆதிசேடனைப்போலத் தோற்றுவதும் அது மயிலைக் கண்டு அஞ்சுவதுமாகிய செய்திகள். இப்போது இங்கே பார்க்கப் போகிற கந்தர் அலங்காரப் பாடலிலும் வருபவை. சாதாரண மயிலைக் கண்டாலே பாம்புக்குப் பயம். பாம்புக்கும் மயிலுக்கும் எப்போதுமே விரோதம். தான் படம் விரித்து ஆடினுல் முருகப்பெருமானுடைய வாகனமாகிய மயில் கொத்துமே என்று அஞ்சி, ஆடாமல் அசையாமல் ஆதிசேடன் திருச்செங்கோடு என்னும் மலையாகப் படுத்துகிடக்கிருன் என்று சமத்காரமாக மேலே சொன்ன பாட்டுத் தெரிவிக்கிறது.

அருணகிரிநாதர் ஒரு புதிய கற்பனை செய்கிருர். இது கந்த புராணத்தில் இல்லாதது. திருச்செங்கோட்டுப் புராணத்திலும் இல்லாதது. அதை இப்போது பார்க்கலாம்.

## ஆதிசேடன் கர்வம்

முருகப்பெருமான் தன்னுடைய மயில் வாகனத்தில் ஏறிக்கொண்டு உலா வந்தான். தன் மாமனுரைப் பார்த்து விட்டுவரலாம் என்று திருவைகுந்தத்திற்கு எழுந்தருளினுன். அப்போதுதான் திருமால் தம்முடைய மெத்தென்ற பாம்புப் படுக்கையின்மேல் படுத்துக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தார். ஆதிசேடன் தன் படங்களை விரித்துக் கொண்டு அந்தப் பெருமானுக்குக் குடைபோல இருந் தான். அப்போது அவன் கண்களில் முருகப்பெருமான் வாக னமாகிய மயில் தென்பட்டது. பொதுவாகத் தன்னுடைய இனத்தினர் மயிலுக்கு அஞ்சித் துன்புறுவதை அவன் தெரிந்துகொண்டிருந்தான். 'இப்போது இந்த மயில் நம்மை என்ன செய்யும்?' என்ற கர்வம் அவனுக்கு உண்டாயிற்று. 'நாம் திருமாலினுடைய படுக்கையாக இருக்கிறேம். அந்தப் பெருமானுடைய சங்கும்சக்கரமும் நமக்குக் காவலாக இருக் கின்றன. இப்போது இது நம்மை என்ன செய்துவிடும்?' என்று அவன் நினைத்தான். உடனே ஆயிரம் படங்களையும் நன்ருக விரித்து அடித்துக்கொண்டு, ''மயிலே, மயிலே. சௌக்கியமா?'' என்று கேட்டான். பின்பு சிறிதே ஏளன மாகச் சிரித்தான்.

## மயிலின் கோபம்

மயில் ஒருகணம் அப்படியே நின்று திரும்பிப் பார்த்தது. ஆதிசேடனுடைய உள்ளத்தில் ஓடுகின்ற செருக்கை அதனுல் உணர்ந்துகொள்ள முடிந்தது. 'நம்மைக் கண்டு காததூரம் ஓடவேண்டிய இவன் இங்கே திருமால் தன்மேலே படுத்துக் கொண்டிருப்பதனுல் அல்லவா இத்தகைய கர்வத்தை அடைந்திருக்கிறுன்? திருமால் நம் பெருமானைக்காண்பதற்கு வரும்போது இவன் அங்கே வருவதில்லை. ''எம்பெருமான் வலிய இங்கே வந்திருக்கிறுனே! அது அவன் பெருங்கருணை யல்லவா?'' என்று எண்ணிப் பணிவாக இல்லாமல்

என்னை எளிதாக எண்ணி நகைக்கிறான்' என்று மயிலுக்குக் கொஞ்சம் கோபம் உண்டாயிற்று.

மயில் தனியாகப் போயிருந்தால் அதற்குக் கோபம் வராது. இப்போது முருகப்பெருமானுக்கு வாகனமாக இருக்கிறது. ஒரு தலைவனுக்குப் பெருமை இருந்தால் அவனைச் சார்ந்த அங்கங்களுக்கும் பெருமை உண்டாகும். மற்றவர்கள் தலைவனிடத்தில் காட்டுகின்ற மரியாதையில் ஒரு பகுதியை, அவனைச் சார்ந்தவர்களிடத்திலும் காட்டினால் தான் தலைவனால் நன்மை கிடைக்கும்.

## வாகனத்தின் பெருமை

இறைவனுடைய தொடர்பினால் அவன் வாகனங்களுக்கும் பெருமை உண்டென்பதைப் பல செய்திகளால் உணர்ந்து கொள்ளலாம். அருணகிரிநாதர், ஆடும் மயிலாகின்ற ஆண்டவனது வாகனத்தைப் பலபடியாகப் பாடியிருக்கிறார் என்பதைப் போன சொற்பொழிவில் சொன்னேன்.

ஒரு கோயிலைப் பார்த்தவுடனேயே அது இன்ன கோயில் என்று தெரியவேண்டுமானால் அந்தக் கோயிலின் திருமதிலைப் பார்த்தால் தெரியும். அந்த மதிலின்மேல் உள்ளேயிருக்கும் மூர்த்தியின் வாகனத்தை அமைத்திருப்பார்கள். கோயிலுக்குள்புகுந்தால் கொடிமரத்தின் அருகில் அந்த வாகனத்தைப் பார்க்கலாம். அதை வணங்கிவிட்டே உள்ளே போவது ஒரு சம்பிரதாயம். திருமதிலின் மேலுள்ள அடையாளத்தைக் கண்டு அது இன்ன கோயில் என்று தெரிந்து கொள்ளலாம். இதைச் சொல்லும்போது எனக்கு ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது.

## ஆசாரிய சுவாமிகள் திருவாய் மலர்ந்தது

ஒருநாள் இரவு ஒருசிறிய கிராமத்தில்காமகோடிபீடாதிபதிகளாகிய ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளைத் தரிசித்தேன். சிறிது நேரம் அவர்களிடம் பேசி இன்புறும் பேறு

எனக்குக் கிடைத்தது. அப்போது அவர்கள், "திருப்பதி முருகன் தலமா? திருமாலின் தலமா?" என்று கேட்டார்கள் "இரண்டுக்கும் ஆதாரம் உண்டு" என்று சொன்னேன்.

"என்ன என்ன காரணங்களினால் அதை முருகன் தலம் என்று சொல்கிறார்கள்?" என்று அவர்கள் என்னைக் கேட்டார்கள். நான் பல ஆதாரங்களைச் சொல்லி, "வடநாட்டார் பாலாஜி என்று அந்த ஆண்டவனை அழைக்கிறார்கள். பாலனாக இருப்பவன் முருகன்தான். வெள்ளிக் கிழமையன்று வில்வ அர்ச்சனை நடக்கிறது. மலைகளுக்கு எல்லாம் முருகன் தலைவன் என்பது ஒரு வழக்கு" என்று நான் சொல்லிக் கொண்டு வந்தேன். பிறகு அவர்கள் "உன்னுடைய கருத்து என்ன?" என்று கேட்டார்கள். "பழங்காலத்தில் அங்கே முருகன் கோயிலும், திருமால் கோயிலும் இரண்டும் இருந்திருக்க வேண்டும். திருமால் கோயிலுக்குச் சிறப்பு வரவர, முருகன் கோயில் மறைந்திருக்கவேண்டும் என்று நினைக்கிறேன்" என்றேன்.

உடனே அவர்கள் ஒரு நுட்பமான கருத்தைச் சொன்னார்கள். "ஏதோ ஒரு புராணத்தில் அங்கே இரண்டு சக்திகள் இருப்பதாகப் படித்திருக்கிறேன். கௌமாரி, வைஷ்ணவி ஆகிய இரண்டு சக்திகளும் அங்கே இருப்பதாக அந்த நூல் சொல்கிறது. நீ திருப்பதி போயிருக்கிறாயா?" என்று கேட்டார்கள். நான் அங்கே போகாத காலம் அது. ஆகையால், "இல்லை" என்று சொன்னேன். "போனால் அந்தக் கோயில் மதில் சுவரைப் பார். முருகன கோயிலாக இருந்தால் மயில் வாகனம் இருக்கும். திருமால் கோயிலாக இருந்தால் கருட வாகனம் இருக்கவேண்டும். ஆனால் அங்கே என்ன இருக்கிறது தெரியுமா? சிங்க வாகனத்தைத் தான் காணலாம். அது சக்தியின் வாகனம். தொண்டை நாட்டிலும், அதற்கு வடக்கிலும் அம்பிகை கோயிலின் முன் வாகனமாகச் சிங்கத்தைத்தான் பார்க்கலாம். சோழ தேசத்தில் ரிஷபம் இருந்தாலும் தொண்டை நாட்டில் சிங்கத்தை வைத்திருப்பார்கள். தொண்டை நாட்டுக்கு

வடக்கேயுள்ள திருப்பதியில் சிங்கம் திருமதிலில் இருப்பதைக் கொண்டு, அது சக்தி க்ஷேத்திரம் என்பது விளங்குகிறது அல்லவா? இரண்டு சக்திகள் இருப்பதனுல் முருகன் கோயில் என்றும், திருமால் கோயில் என்றும் சொல்கிருர்கள்'' என்று அருளினுர்கள்.

பிறகு அங்கே இருந்த ஒருவரிடம், ''எனக்குத் திருப் பதியில் கொடுத்த பரிவட்டம் உள்ளே இருக்கிறது. அதைக் கொண்டுவா'' என்று பணித்தார்கள். அதை அவர் கொண்டு வந்து கொடுத்தார். அதை என்னிடம் கொடுத்து, ''அளந்து பார்'' என்ருர்கள். திருப்பதியை அதுவரைக்கும் பாராதிருந்த எனக்குத்திருவேங்கடவனுடைய திருமேனியில் அணிந்த பரிவட்டம் என் கையில் பட்டவுடன் புளகாங் கிதம் உண்டாயிற்று. என் கையால் அதனை அளந்து முழம் போட்டேன். சரியாக முப்பத்தாறு முழம் இருந்தது.

''திருப்பதிப் பெருமாளுக்குத் தனியாகத் தறி போட்டு ஆடை நெய்வது வழக்கம். அதற்கென்று தனியே ஒரு கிராமம் இருக்கிறது. முப்பத்தாறு முழம் உள்ள பரிவட்டந் தான் பெருமாளுக்கு அணிகிருர்கள். முப்பத்தாறு முழம் என்பதில் ஏதாவது உனக்குத் தோன்றுகிறதா?'' என்று ஸ்ரீ ஆசாரியாரவர்கள் கேட்டார்கள். எனக்கு ஒன்றும் தெரியவில்லை. சும்மா இருந்தேன். அவர்கள், ''பொது வாக நம்மவர்களில் பெண்கள் பதினெட்டு முழம் கட்டுகிருர் கள். ஒரு பெண்ணுக்குப் பதினெட்டு முழம் என்ருல் இரண்டு பெண்களுக்கு முப்பத்தாறு முழம் அல்லவா? இரண்டு சக்திகள் சேர்ந்த மூர்த்தி முப்பத்தாறு முழம் கட்டுவது பொருத்தந்தானே?'' என்ருர்கள். இது சமத்கார மாகச் சொன்ன வார்த்தை. ஆனுலும் இரண்டு சக்திகள் சேர்ந்த மூர்த்தி அங்கே திருக்கோயில் கொண்டிருப்பதை அன்று அவர்கள் வாயிலாக உணர்ந்தேன். அதற்கு ஆதார மாகத் திருவேங்கடம் கோயில் மதிலிலுள்ள வாகனம்சிங்கம் என்பதை மனத்தில் பதித்துக் கொண்டேன்.

## வாகன அடையாளம்

வாகனத்தைக் கோயிலுக்கு அடையாளமாக வைப்பது வழக்கம் என்பதற்காக இந்த நிகழ்ச்சியை இப்போது சொன்னேன். சிவன் கோயில் என்ருல்திருமதிலின் மேல் ரிஷபம் இருக்கும். பிள்ளையார் கோயில் என்ருல் மூஷிகம் இருக்கும். திருமால் கோயில் என்ருல் திருமதிலின்மேல் கருடாழ்வார் இருப்பார். முருகன் கோயில் மதில்மேல் மயில் இருக்கும். ஒரே ஓர் ஊரில் மாத்திரம் இந்த அடையாளத்தைக் காண முடியாது. திருவாவடுதுறையிலுள்ள கோயிலின் மதில்மேலே இடபங்களைக் காண முடியாது. முன்பு இருந்தனவாம். திருமாளிகைத் தேவர் என்ற சித்தர் அந்த ரிஷபங்களுக்கு உயிர் உண்டாக்கிப் பகைவரிடம் போரிட அனுப்பி விட்டாராம். அந்த ஊர்த் திருமதில் மேல்தான் ரிஷபங்களைக் காண முடியாது.

## மயிலின் சிறப்பு

எம்பெருமானை யாவரும் காணத் தன்மேலே ஏற்றிக் கொண்டு வருகிற வாகனம் மயில்.

"நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனுலே
மால்கொண்ட பேதை"

என்று அருணகிரியார் திருப்புகழில் பாடுவார். எம்பெருமான் திருக்கோயிலில் இருந்தபடியே இருந்தால் பலர் அவனுடைய காட்சியைப் பெறுவதில்லை. ஆனுல் நையாத மனத்தினரையும் நையும்படியாகச் செய்ய ஆண்டவன் மயில் வாகன மூர்த்தியாக எழுந்தருளுகிருன். அதனுல் வீதியிலுள்ள மக்கள் அவன் தரிசனத்தைப் பெற்று இன்புறுகிருர்கள். முருகப் பெருமான் எந்தச் சமயத்திலும் அடியார்களுக்கு அருள் செய்வதற்காக நீல மயில் மேல் ஏறி வருகிருன்.

"நீலச் சிகண்டியில் ஏறும் பிரான்எந்த நேரத்திலும்
கோலக் குறத்தியுடன் வருவான்"

என்று அலங்காரத்தில் முன்பு வந்ததை நாம் கண்டோம். மயில் பிரணவத்தின் சொரூபம் என்பதையும் நாம் அறிந் திருக்கிறோம். அத்தகைய மயிலின் பெருமையை ஆதிசேடன் எண்ணிப் பார்க்கவில்லை. தான் மிக்க உயர்ந்த நிலையில் இருப்பதாக எண்ணித் தன் வைரியான மயிலுக்குத் தன் மிடுக்கைக் காட்டவேண்டுமென்று தோன்றியது போலும்!

## மயிலின் செயல்

மாப்பிள்ளைக்கு எவ்வளவு வயசானாலும் மாமனார் அவனுக்கு மரியாதை செய்ய வேண்டும். 'மாப்பிள்ளையிலும் எருமையிலும் கிழம் இல்லை' என்ற ஒரு பழமொழி வழங்கு கிறது. மாப்பிள்ளை வீட்டாரிடத்தில் மாமனார் வீட்டார் கள் மரியாதையோடு நடந்து கொள்ளாவிட்டால் கோப தாபங்கள் உண்டாகிவிடும். இங்கே மாப்பிள்ளைப் பெரு மானாகிய முருகன் வரும்போது அவன் வாகனத்தை ஆதிசேடன் அலட்சியம் செய்து விட்டான். திருமால் நன்றாகக் குறட்டை விட்டுத் தூங்கினார். தலைவர் கொஞ்சம் அசட்டையாக இருந்தாலும் உடன் இருக்கும் ஏவலாளிகள் அதை மறைத்து மரியாதை செய்யவேண்டும். அதற்கு மாறாக ஆதிசேடன் நடந்துகொண்டான். அவன் தன்னை அவமானம் செய்துவிட்டான் என்பதை மயில் உணர்ந்தது. தன் தோகையைச் சர்ர் என்று ஒரு முறை அடித்துக் கொண்டது. அப்படி அடித்ததனால் ஒரு பெரும் காற்றுப் புறப்பட்டது. அந்த வேகத்தில் ஆதிசேடனுடைய படங்கள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டன. முன்னாலே காற்று மோதியதனால்தானே தலைகள் பிய்ந்து விழுந்தான் ஆதிசேடன்? இப்போது தலைகள் ஒன்றோடு ஒன்று மோதி யதனால் படங்களில் இருந்த இரத்தினங்கள் பொல பொல வென்று உதிர்ந்தன. வாயில் அடித்தால் பற்கள் பொல பொலவென்று உதிர்வதுபோல், மயில் ஆரவாரித்துத்

தோகையை அடித்துக் கொண்டதனுல் ஆதிசேடனுடைய பணுமுடியிலுள்ள இரத்தினங்கள் உதிர்ந்துவிட்டன. பிறகு மயில் ஒரு கொத்துக் கொத்தியது. அந்தத் தாக்குதலைப் பொறுக்க முடியாத ஆதிசேடன், கிடந்த நிலையில் இல்லாமல் கொஞ்சம் புரளும்படியாக ஆகிவிட்டது. புரளவே, மேலே படுத்துக்கொண்டு உறங்கிய திருமால் கீழேவிழுந்தார். தூங்கினுலும் அவர் திருக்கரத்தில் சங்கமும் சக்கரமும் இருந்தன. அவர் கீழே விழுந்தவுடன் சங்கு சக்கரங்கள் கையிலிருந்து நழுவி விழுந்துவிட்டன. இப்போது முருகப்பெருமானுடைய வாகனமாகிய மயிலின் அடியின்கீழ் ஆதிசேடனுடைய தலைகளிலிருந்து உதிர்ந்த மாணிக்கங் களும், திருமாலின் கையிலிருந்த சக்கராயுதமும் சங்கமும் விழுந்து கிடக்கின்றன.

இத்தகைய காட்சி ஒன்றை அருணகிரியர் தம் கற்பனை யினுல் அமைத்துக் காட்டுகிருர்.

**சேலில் திகழ்வயல் செங்கோடை வெற்பன்**
**செழுங்கலபி**
**ஆலித்து அனந்தன் பணுமுடி தாக்க அதிர்ந்து**
**அதிர்ந்து**
**காலில் கிடப்பன மாணிக்க ராசியும்**
**காசினியைப்**
**பாலிக்கும் மாயனும் சக்ரா யுதமும் பணிலமுமே.**

**செங்கோட்டு வளம்**

செங்கோடை என்பது திருச்செங்கோடு, அவர் காலத் தில் அங்கே வயல்கள் நிரம்பியிருந்தன. அந்த வயல்களிற நெல் இருக்கிறதென்று சொல்லலாம்; பசுமை இருக்கில் தென்று சொல்லலாம். அருணகிரியார் சேல் மீன்கள் திகழும் வயல் என்று வருணிக்கிருர். வயல்களில் நீர் நிரம்பினுல் சேல் மீன்கள் உலவும். சேல்கள் திகழும் என்றதனுல் அங்குள்ள நீர்வளத்தைப் புலப்படுத்தினுர். அதோடு மக்களு டைய நீர்மை வளமும் புலனுகிறது. அந்த மீன்கள் அவர்கள்

வயிற்றில் போகாமல் குழந்தைகளைப் போல வயல்களில் துள்ளுகின்றன. இப்படிச் சொல்வது அருணகிரியாருடைய வழக்கம்.

"சேல்பட்டு அழிந்தது செந்தூர் வயற்பொழில்

என்ற பாட்டில் அதனைப் பற்றி விரிவாக நாம் பார்த்தோம். திருச்செங்கோட்டைச் சொல்லும்போது,

"சேலார் வயற்பொழில்"

என்று சொல்லியிருப்பதையும் பார்த்தோம். இவற்றை யெல்லாம் ஒப்ப,

சேலில் திகழ் வயல் செங்கோடை வெற்பன்

என்று இங்கே சொன்னார். அங்கே மலை வளமும் உண்டு; வயல் வளமும் உண்டு.

## சேடன் பட்ட பாடு

முருகனுடைய மயிலைச் செழுங்கலபி என்று சொல்கிறார். செழுமையான கலாபத்தையுடையது என்று பொருள். கலாபத்தையுடையது கலாபி. அது இங்கே செய்யுள் ஓசையை நோக்கிக் கலபி என்று ஆயிற்று. அது ஆரவாரித்து அனந்தனுடைய பணாமுடியைத் தாக்கியதாம்.

ஆலித்து அனந்தன் பணாமுடி தாக்க.

அதனுடைய விளைவு என்ன என்பதைப் பின் இரண்டு அடிகளில் சொல்கிறார்.

அதிர்ந்து அதிர்ந்து
காலில் கிடப்பன மாணிக்க ராசியும் காசினியைப்
பாலிக்கும் மாயனும் சக்ராயுதமும் பணிலமுமே.

அதிர்ந்து அதிர்ந்து மாணிக்க ராசிகளை எல்லாம் கக்கி விட்டான் ஆதிசேடன். அந்த மாணிக்கக் குவியல் மயிலின் காலடியில் விழுந்து கிடந்தது.

காலில் கிடப்பன மாணிக்க ராசியும்.

ஆண்டவனது காலில் விழவில்லை. மயிலின் காலில் அருச்சனை செய்த மாதிரி அவை கிடக்கின்றனவாம். ஆயிரம் மணிகள் மயிலின் காலில் கிடக்கின்றன. ஆயிரம் செம்மலரால் அருச்சனை செய்ததுபோல அது தோற்றும் அல்லவா? ராசி என்பது கூட்டம் என்னும் பொருளுடையது. ஆண்டவனுடைய வாகனமாகிய மயில் தன் தோகையை அடித்து ஆரவாரித்து ஆதிசேடன் பணாமுடியைத் தாக்கியதனால் நிகழ்ந்த நிகழ்ச்சி இது. ஆதிசேடன் உடம்பை அடித்திருக்கலாம். அகங்கரித்து நிமிர்ந்தது பணாமுடிதானே? ஆகையால் அங்கே தாக்கியது. ஆதிசேடனை அழித்துவிடாமல் இந்த அளவில் மயில் நிறுத்தியது. தலை நிமிர்ந்திருந்த ஆதிசேடன் மணிகளைக் கக்கிவிட்டுத் தலை பணிந்து புரண்டு விழுந்தான்.

பாம்புக்கு நஞ்சும் உண்டு, மாணிக்கமும் உண்டு. நஞ்சு இருக்கிறதென்று எண்ணினால் அது தன் தலையை நிமிர்த்தி வைத்துக்கொள்வதற்குக் காரணம் இல்லை. மாணிக்கம் இருக்கிறது என்ற செருக்கினால் அது தலை நிமிர்ந்து இருந்தது. அந்தச் செருக்குக் காரணமான மாணிக்கத்தை இப்போது தகர்த்துக் கீழே விழச் செய்து விட்டது மயில். ஆயிரம் மாணிக்கங்களும் உதிர்ந்து ஆதிசேடன் வெறும் பாம்பு போலக் கிடந்தான்.

## சார்பினால் வந்த தீங்கு

அது மாத்திரமா?ஆதிசேடன் தவறு செய்தான். அதனால் தண்டனை பெற்றான். ஒரு தவறும் செய்யாத திருமாலும் ஏன் கீழே விழுந்தார்? நல்லவர்கள் பொல்லாதவர்களுடன் சேர்ந்தால் அவர்களுக்கும் துன்பம் உண்டாகும். அது மாதிரி இங்கே காசினியைப் பாலிக்கும் மாயனாரும் கீழே விழுந்தார். அவர் கையிலுள்ள சங்க சக்கரங்களும் கீழே விழுந்தனவாம்.

எறிபத்த நாயனார் என்னும் அடியவர் ஒருவர். இருந்தார். சிவகாமி ஆண்டார் என்பவர் கையில் இருந்த ஒரு மாலையை மன்னனுடைய யானை பறித்துக் காலின் கீழே

போட்டுத் துகைத்துவிட்டது. அதைக் கண்ட நாயனர் அதன் துதிக்கையை வெட்டினராம். பின்பு அதன் மேலே இருந்த பாகனையும் வெட்டினராம். யானை தவறு செய் திருந்தாலும் அதனைச் சார்ந்ததனல் பாகனுக்கும் தண்டனை கிடைத்தது.

பெரிய காட்டுக்கு நடுவில் சந்தன மரம் இருந்தால் அந்தக் காட்டிலுள்ள முள் மரங்களுக்குக் கொள்ளி வைத்துச் சுடும்போது அவற்ருேடு சேர்ந்து நடுவிலுள்ள சந்தன மரமும் எரிந்துதான் போகும். அதுபோல, சிற்றினத்தைச் சேர்ந் தால் எவ்வளவு உயர்ந்தவர்களாக இருந்தாலும் தீங்கே அடைவார்கள் என்பதை இந்தப் பாட்டுப் புலப்படுத்து கிறது.

இங்கே மற்ருெரு சிறப்பு : மாணிக்க ராசியும் மாயனும் சக்ராயுதமும் பணிலமும் கிடந்தன என்று சொன்னர். கிடந்தன என்பது அஃறிணை. மாணிக்கக் கூட்டம் அஃறிணை. சக்கரப்படை அஃறிணை. சங்கம் அஃறிணை. மாயனே உயர்திணை. மயிலின் காலில் விழுந்து கிடக்கும்போது உணர் வற்ற அஃறிணை போலக் கிடந்தாராம். அதனல் அஃறிணை களோடு சேர்த்துச் சொல்லி விட்டார்.

இது ஒரு வகையாகக் கற்பனை பண்ணிய காட்சி. திருமாலை இழித்துச் சொல்ல வேண்டுமென்பது அருணகிரி யாரின் நோக்கம் அல்ல. தான் கெட்டதல்லாமல் தன்பால் உறங்கிய பெருமாளுக்கும் தீங்கு உண்டாகும்படி செய்தான் என்றதனல், ஆதிசேடனுடைய அபசாரத்தின் மிகுதியைப் புலப்படுத்தினர்.

'மயில் வாகனத்தில் ஏறிக்கொண்டு முருகன் வைகுண் டத்திற்குப் போனனும். திருமால் ஆதிசேடன் மீது படுத்து உறங்கிக் கொண்டிருந்தார். மயில்மீது தான் கொண்ட பகை காரணமாகச் சற்றே பராமுகத்தோடு நிமிர்ந்து பார்த்து, தன்னிடம் உள்ள மாணிக்கத்தை எண்ணிச் செருக்கிய ஆதிசேடன் மயிலைக் கண்டு ஏளனம் செய்தானும்

மயில் சினந்து தன் தோகையை அடித்துக்கொண்டு ஆதி சேடனுடைய படங்களோடுகூடிய முடியைத் தாங்கி மோத, அவற்றிலுள்ள மாணிக்கங்கள் சிதறி மயிலின் காலில் விழுந்து குவிந்தனவாம். இவற்றோடு திருமாலும் விழுந்தாராம். சங்கமும் சக்கரமும் விழுந்தனவாம்' என்று ஒரு காட்சியைக் கற்பனை செய்து அருணகிரியார் வருணிக்கிறார்.

இப்படி எந்தப் புராணத்தில் வருகிறதென்ற கேள்வி எழலாம். இது எந்தப் புராணத்திலும் இல்லை கந்தன் பெருமையைப் பல வகையான கற்பனைகள்அமைத்து அலங்காரமாகச் சொல்லிக்கொண்டு வருகிற அருணகிரியார் இந்தக் காட்சியைத் தாமே படைத்து மொழிந்தார். மயிலின் பெருமையை இந்த வகையில் சொல்ல வேண்டுமென்று அவருக்குத் தோன்றியது.



சேலின் திகழ்வயல் செங்கோடை
வெற்பன் செழுங்கலபி
ஆலித்து அனந்தன் பணாமுடி
தாக்க அதிர்ந்துஅதிர்ந்து
காலில் கிடப்பன மாணிக்க
ராசியும் காசினியைப்
பாலிக்கும் மாயனும்
சக்ரா யுதமும் பணிலமுமே.

[சேல்மீன்களால் வளம் விளங்குகின்ற வயல்களையுடைய திருச்செங்கோட்டுமலைக்குரியவனாகிய முருகனது வாகனமாகிய செழிப்பான தோகையை உடைய மயில், ஆரவாரம் செய்து ஆதிசேடனது படங்களையுடைய தலையைத் தாக்க, அதனால் அத்தலைகள் அதிர்ந்து அதிர்ந்து நடுங்க, அதுகாரணமாக அந்த மயிலின் காலில் கிடக்கும் பொருள்கள், மாணிக்கக்கூட்டமும். உலகைப் பாதுகாக்கும் திருமாலும், அவனுடைய சக்கரப் படையும், சங்கும் ஆகியவை.

சேலின் - சேல் மீன்களால். செங்கோடை - திருச்செங்கோடு, வெற்பன் என்றது முருகனை. கலபி - தோகையையுடைய மயில். ஆலித்து - ஆரவாரம் செய்து. அனந்தன் - ஆதிசேடன். பணாமுடி - படங்களையுடைய தலை; பணம் - படம். ஆயிரம் படங்களாதலின் அதிர்ந்து அதிர்ந்து என்றார். காலில் - மயிலின் காலில், ராசி - கூட்டம் பாலிக்கும் - காப்பாற்றும். மாயன் - திருமால். பணிலம் - சங்கு.]

மயில் செருக்குடையவர்களை அடக்குவது என்பது கருத்து

இது கந்தர் அலங்காரத்தின் 97-ஆவது பாட்டு.

# கதியும் விதியும்

## கணியன் பூங்குன்றனார் பாட்டு

தமிழ் நாட்டில் சொற்பொழிவு செய்கிறவர்கள், அதிலும் இலக்கியத் துறையில் சொற்பொழிவு ஆற்று கிறவர்கள், அடிக்கடி சொல்கிற வரி ஒன்று உண்டு.

"யாதும் ஊரே யாவரும் கேளிர்"

என்ற அடியை எத்தனையோ இலக்கியச் சொற்பொழி வாளர்களிடம் நாம் கேட்டிருக்கிறோம். **புறநானூறு** என்ற சங்க நூலில் வரும் பாட்டு ஒன்றின் முதல் அடி அது. அதைப்பாடியவர் கணியன் பூங்குன்றனார் என்ற சங்ககாலப் புலவர். பெரும்பாலும் அந்தப் பாட்டின் முதல் அடியை மாத்திரம் சொல்லி விட்டுவிடுவார்கள். 'யாதும் ஊரே யாவரும் கேளிர், அடுத்த அடியை அப்பால் கேளீர்' என்ற முறையில் அதனை நிறுத்திவிடுவார்கள். ஆனால் அந்தப் பாட்டு உலகம் முழுவதும் ஒன்று என்ற நினைப்பை உண்டாக்குவதோடு, வேறு ஒரு கருத்தையும் வற்புறுத்து வதற்காக எழுந்தது. பாடினவர் சோதிடம் அறிந்தவர். கணி, கணியன் என்பன சோதிடனுக்குரிய பெயர். பூங்குன்றனார் என்ற அந்தப் புலவர் சோதிடம் நன்றாகத் தெரிந்தவர். முன்னை வினைப்பயனால் இந்தப் பிறவியில் வருகிற விளைவுகளை எல்லாம் ஒருவாறு தெரிந்து சொல்வது சோதிடம். ஆகவே சோதிட நூலுக்கு அடிப்படையாக நிற்பது விதி. விதியில் நம்பிக்கை இல்லாதவர்களுக்குச்

சோதிடத்தில் நம்பிக்கை இராது. இந்திய நாட்டில் விதியின் வலிமையை வற்புறுத்திய பெரியவர்களில் திருவள்ளுவரும் ஒருவர். திருக்குறளில் ஊழ் என்று தனியே ஓர் அதிகாரம் வைத்திருக்கிருர். கணியன் பூங்குன்றனுர் பாடிய பாட்டும் விதியை வற்புறுத்த வந்ததுதான். அவர் சொல்கிற கருத்தைக் கொஞ்சம் கேட்கலாம்.

### உயிரும் விதியும்

"எமக்கு இதுதான் ஊர், இவர்தாம் சொந்தக்காரர் என்ற வேறுபாடு இல்லே. எல்லாம் எம் ஊரே. எல்லாரும் எமக்கு உறவினர்களே. யாம் பெறுகிற தீமையும், யாம் அடைகிற நன்மையும் பிறர் காரணமாக வந்தன என்று எண்ணுவது தவறு. யாம் வருந்துவதும் வருத்தம் தணிவதும் மற்றவர்களாலே வருவன அல்ல; அவற்றுக்குக் காரணம் வேறு ஒன்று. செத்துப் போவதுகூடப் புதிய காரியம் அன்று. அது இயற்கையாக அமைந்ததுதான். வாழ்வது மிகவும் இனிமை என்று எண்ணி மகிழ்ச்சி பெறும் இயல்பு எம்மிடம் இல்லே. ஏதாவது தீங்கு வந்துவிட்டால் கசப்புக் கொண்டு இது மிகவும் கெட்டது என்று சொல்ல மாட்டோம். பெரியவர்கள் தம்முடைய அநுபவத்தினுலும், அறிவினுலும் நமக்குப் பலவற்றைச் சொல்லியிருக்கிருர்கள். அவற்றில் மிகவும் முக்கியமானது விதி செய்யும் காரியம். அதுவே இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு ஆகிய பல வகையான அநுபவங்களேப் பெறச் செய்கிறது. மலேப் பிராந்தியங்களில் மின்னல் மின்னி இடி இடித்துப் பெரிய மழை பெய்கிறது. அந்த மழை மலேயிலிருந்து அருவியாக வந்து கரையை மோதிக் கொண்டு சம பூமியில் வந்து பெரிய ஆருக ஓடுகிறது. புது வெள்ளத்தின் ஓட்டம் வேகமாக இருக்கிறது. அந்த ஓட்டத்தில் ஒரு தெப்பக் கட்டையைப் போட்டால் அது ஆற்றின் வழியே செல்லும். கொஞ்சம் வேகம் குறைந்தால் மெல்லப் போகும். வளேந்து போனுல் வளேந்து போகும். எந்தத் திசையில் ஆறு போகிறதோ

அந்தத் திசையில் புணை போகும். அது எதிர் நீச்சுப் போட்டுச் செல்வது இல்லை. ஆற்று நீர் போகின்ற வழியே அந்தத் தெப்பக் கட்டையும் மிதந்து செல்லும். அதுபோல, உயிரானது வாழ்க்கை என்னும் நதியில் விதி என்னும் ஓட்டத்திற்கு ஏற்பப் போய்க் கொண்டிருக்கிறது. அந்த விதிதான் எல்லாவற்றையும் செய்கிறது. இதனை அறிவுடையவர்களின் உபதேசங்களால் யாம் அறிந்திருக் கிறோம். ஆகவே, பெரியவர்களைப் பார்த்து, அவர்கள் மிகப் பெரியவர்கள், பெரிய காரியங்களைச் செய்தவர்கள் என்று யாம் வியக்க மாட்டோம். அது நியதி. ஒருகால் அவர்களை வியந்தாலும் சிறியவர்களைப் பார்த்து, அவர்கள் சிறிய செயல்களைச் செய்தார்கள் என்று இகழ்வதை யாம் ஒருபோதும் செய்யமாட்டோம். எல்லாவற்றக்கும் மூல காரணமான விதி ஓட்டத்தின் வழியே உயிர் இயங்குகிறது என்பதைத் திண்மையாகத் தெரிந்து கொண்டிருக்கிறோம்.''

இந்தப் பொருளை வைத்து அவர் பாடினார்.

''யாதும் ஊரே; யாவரும் கேளிர்;
தீதும் நன்றும் பிறர்தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன;
சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்
இனிதுஎன மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்
இன்னாது என்றலும் இலமே; மின்னொடு
வானம் தண்துளி தலைஇ ஆனாது
கல்பொருது இரங்கும் மல்லல் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆர்உயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியின் தெளிந்தனம் ஆகலின், மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.''

இந்தப் பாட்டில் உயிர் நாடியாக இருப்பது,

''பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆர்உயிர்
முறைவழிப் படூஉம்''

என்பதுதான். பெரிய ஆற்றினது நீர் ஓட்டத்தின் வழியே தெப்பக் கட்டை மிதந்து செல்வது போல, உயிரானது விதியின் வழியேதான் செல்லும் என்பது அதன் பொருள். இங்கே உயிரைத் தெப்பக் கட்டையாகச் சொன்னவர் விதியை நீரோட்டமாகச் சொன்னார். தண்ணீர் இல்லாமல் இருந்தால் ஆறாகாது. நீர் ஓட்டம் விதிக்கு ஒப்பானது. நீர் ஓட ஓட அது ஓர் வழியை வரையறுத்துக் கொள்கிறது. அதனால்தான் நதிக்கு ஆறு என்ற பெயர் வந்தது. விதி வாழ்க்கையை வரையறுக்கிறது.

இந்தப் பாட்டை இப்போது எண்ணியதற்குக் காரணம்: அருணகிரிநாத சுவாமிகள் இதுபோல் ஒரு பாட்டைக் கந்தர் அலங்காரத்தில் சொல்கிறார். அவரும் விதியையும் எடுத்துச் சொல்கிறார். ஆனால் சற்றே வேறுபாடுள்ளது அந்தப் பாட்டு.

## ஆற்றில் மிதப்பவன்

ஒருவன் ஒரு பெரிய மூட்டையைத் தலையில் சுமந்தபடியே நடந்து கொண்டிருந்தான். இருட்டில் நடக்கிறவனாகையால் இன்ன இடத்தின் வழியாகப் போகிறோம் என்ற நிதானம் அவனுக்குத் தெரியவில்லை. நடக்கிற இடம் சற்று மெத்தென்றும், தடையில்லாமலும் இருந்ததனால் போய்க்கொண்டே இருந்தான். அவன் போன இடம் ஒரு காட்டாறு. அந்த ஆற்றில் வெள்ளம் இல்லை. மணல் பரவியிருந்தது. அது மணல் பாதை என்று எண்ணி விட்டான். அப்போது திடீரென்று வெள்ளம் வந்தது. காட்டாறு ஆதலால் இன்ன சமயத்தில் வெள்ளம் வரும் என்று சொல்ல இயலாது. அது தோன்றிய இடத்தில் மழை அதிகமாகப் பெய்தமையினால் அங்கே உண்டான வெள்ளம் அவன் நடக்கும் இடத்திலும் வந்துவிட்டது. வேகமாக வெள்ளம் வரவே, பிரயாணி அதில் அகப்பட்டுக் கொண்டான். வெள்ளத்தின்மேல் மிதந்தான். வெள்ளம்

வந்ததனால் நடப்பதற்கும், தலையில் மூட்டை இருந்ததனால் நீச்சம் அடிப்பதற்கும் வழியில்லை. எப்படியோ தட்டுத் தடுமாறித் தண்ணீரின் மேலே மிதந்துகொண்டிருந்தான்.

அவனிடமிருந்த மூட்டையின் பாரம் வேறு அமிழ்த்துகிறது. அலை மோதி அந்த மூட்டை நனைந்து விட்டமையினால் அது முன்பு இருந்ததைவிடக் கனமாகத் தெரிகிறது. ஒன்று, அதைத் தூக்கி எறிந்துவிட்டு அவன் நீந்திப் போக வேண்டும்; அல்லது இறந்து போகவேண்டும். அவனோ அந்த மூட்டையை விட மனம் இல்லாமல் பற்றிக்கொண்டே இருக்கிறான். வெள்ளம் போய்க் கொண்டிருக்கிறது. அந்த வெள்ளத்தின் வழியே அவனும் போகிறான். மரங்களும், விலங்குகளும் அந்த வெள்ளத்தில் மிதந்து வருகின்றன. அவன் அவற்றின்மேல் மோதிக்கொள்கிறான். கரை எங்கே இருக்கிறதென்று தெரியவில்லை. இருட்டாகையால் திக்குத் தெரியவில்லை. ''எப்போது விடியும்? எப்போது கரையைக் காண்போம்?'' என்று ஏங்கிக் கிடக்கிறான்.

நதிக்குக் கரையிருக்கும். ஆனால் அது எங்கே இருக்கிற தென்று தெரிந்தால்தான் அதனைப் போய்ச் சேரலாம். தெரிந்தாலும் போதாது. முயற்சி பண்ணி அதை அடைய வேண்டும்.

அவனோ இருட்டில் இருக்கிறான். வெள்ளத்தில் மிதக்கிறான். போதாக் குறைக்குப் பெரும் மூட்டை அமிழ்த்துகிறது. முன் பின் போய்ப் பழகின ஆறாக இருந்தாலும், பழக்கத்தால் இன்ன இடத்தில் இருக்கிறோம் என்ற நினைவு இருக்கும். இது வரைக்கும் போகாத இடம் அது. இப்போது அவன் என்ன செய்வான்? ''நான் எங்கே போய்க் கரை ஏறுவது என்று தெரியவில்லையே! கரை என்ற ஒன்று இருக்கிறதா இல்லையா என்றே தோன்றவில்லையே!'' என்று கதறுகிறான். அந்த நிலையில் இருப்பவன் சொல்வதுபோல அருணகிரியார் இந்தப் பாட்டைப் பாடுகிறார்.

## நதிதனை அன்ன வாழ்வு

நம்முடைய வாழ்வு பொய்யான வாழ்வு. பொய் என்பதற்கு இரண்டு பொருள் உண்டு. உண்மை அல்லாதது, நிலையில்லாதது ஆகிய இரண்டையும் பொய் என்றே சொல்வார்கள். வடமொழியில் மித்யை என்பதும் அதுதான். இந்த வாழ்வு நெடுங்காலம் நிலையாக நிற்பது அன்று. கணத்திற்குக் கணம் மாறுகிறது. ஒரே வகையான அநுபவமும், ஒரே வகையான செயல்களும் நமக்கு இருப்பது இல்லை. காலத்திற்குக் காலம், இடத்திற்கு இடம், சார்புக்குச் சார்பு இவை மாறுகின்றன.

ஆற்றில் தண்ணீர் போய்க்கொண்டிருக்கிறது. எப்போதும் ஒரே அளவாகத் தண்ணீர் இருப்பது இல்லை. ஒரு கணம் பார்த்த தண்ணீர் அடுத்த கணத்தில் இருப்பது இல்லை. அது நெடுந்தூரம் போய்விடுகிறது. ஆனால் பொதுவாகப் பார்ப்பதற்கு நதியில் எப்போதும் ஒரே தண்ணீர் இருப்பது போலத் தோன்றுகிறது. ஏரியிலும், குளத்திலும் இருக்கும் தண்ணீர் அப்படி அப்படியே தேங்கி நிற்கிறது. ஆனால் ஆற்றில் இருக்கும் தண்ணீரோ அப்படியே இருப்பது இல்லை. ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருக்கும் தண்ணீர் அடுத்த கணத்தில் வேறு இடத்திற்குப் போய்விடுகிறது.

அதுபோல் வாழ்வில் நாளுக்கு நாள் அநுபவமும், பொருள்களும் மாறிக்கொண்டே இருக்கின்றன. நேற்றுப் பிறந்த அநுபவம் இன்று போய்விடுகிறது. புதியதாக அநுபவம் வருகிறது. கண நேரத்திற்கு முன்னால் தோற்றிய எண்ணம் அடுத்தகணம் நிலைத்து நிற்பது இல்லை. இப்போது புதிய எண்ணம் வந்துவிடுகிறது. நமது சிந்தனையும் கற்பனையும், விருப்பும் வெறுப்பும், இன்ப துன்ப அநுபவங்களும், நட்பும் பகையும், உணவும் உறக்கமும் கணத்திற்குக் கணம் மாறிக்கொண்டே போகின்றன; காலத்திற்குக் காலம் புதியனவாக வருகின்றன. கணந்தோறும் நம் வாழ்க்கை

மாறிக் கொண்டிருக்கிறது. இந்த எண்ணத்தைக் கொண்டு பௌத்தர்கள் க்ஷணபவ பங்கம் என்ற கருத்தைச் சொன்னார்கள். ‘உலகத்தில் எல்லாப் பொருள்களும் கணத்தில் தோன்றி மாறிவிடுகின்றன. வாழ்வும் அத்தகையதே’ என்பதை எண்ணி அவர்கள் அப்படிச் சொல்லியிருக்க வேண்டும்.

ஏரியிலுள்ள தண்ணீர் நிலையாக நிற்பது போல நம் வாழ்வு நிற்பது இல்லை. ஆற்றிலுள்ள தண்ணீர் போகிற மாதிரி நம் வாழ்க்கையும் போய்க் கொண்டிருக்கிறது. இந்த வாழ்வு ஆற்றுப்படுகை. விதி என்னும் நீர் ஓடுகிறது. அந்த நீரோட்டத்தில் நாம் ஆழ்ந்திருக்கிறோம். இரண்டு கரையும் நமக்குத் தெரியவில்லை. ஒரு கரை நல்ல கரை; மற்றொன்று தீய கரை. ஒருகால் கரையோரமாகப் போகிற வாய்ப்பு நமக்கு இருந்தாலும் அது தீய கரையோரமாகப் போகிறதாகவே முடிகிறது. ஒரு கரையில் பூம்பொழில்கள் இருக்கின்றன; மற்றொரு கரையில் முள் புதர்கள் இருக்கின்றன. அந்தப் பூம்பொழிலே சொர்க்கம்; நல்ல பிறவிகள்; முள் புதர்களாக இருப்பவை தீய பிறவிகளும் நரகமும்.

இப்போதுள்ள வாழ்வில் நாம் செய்கிற காரியங்கள் மீண்டும் மீண்டும் இந்த வாழ்விலே நம்மை ஆழ்த்திவிடுகின்றன. ஒன்று நாம் கரையில் ஏறவேண்டும்; அல்லது சமுத்திரத்தில் போய்ச் சேரவேண்டும். நல்ல கரையில் சேர்ந்தால் நல்ல பிறப்புக் கிடைக்கும். தீய கரையில் சேர்ந்தால் தீய பிறப்புக் கிடைக்கும். இந்த இரண்டும் இல்லாமல், கரையைப் பற்றிய கவலையே இல்லாமல் இருக்க வேண்டுமானால் கடலைச் சாரவேண்டும். அந்தக் கடல்தான் ஆண்டவன். கடலைப் போய்ச் சேர்ந்தபின் நதிக்கு ஓட்டம் இல்லை; கரையில்லை.

## உடம்புப் பொதி

நீர் ஓடும் இடந்தான் நதி. மழை பெய்த தண்ணீர் வந்தால் ஆற்றுப்படுகை முழுவதும் பரந்து வெள்ளம் ஓடுகிறது. வெள்ள ஓட்டத்தில் அகப்பட்ட பிரயாணி பெரிய மூட்டையைச் சுமந்துகொண்டு வருந்துகிருன். அந்த மூட்டையே உடம்பு; பல வகையான நரம்புக் கட்டுகளால் அமைந்த உடம்பு, வாழ்க்கை என்னும் நதியில் நம்மை ஆழ்த்துகிறது. மிகவும் அருமையான பொருளை மடியில் வைத்துக்கொண்டு நடக்கிறவனுக்குத் தன் உடம்பின்மேல் காயம் பட்டாலும் கவலைப்பட மாட்டான். அந்தப் பொருளுக்கு ஏதேனும் ஆபத்து வந்தால் அவன் அஞ்சுவான். அதுபோல் நாம் நம்முடைய உடம்புக்குத் தீங்கு ஏதாவது நேர்ந்தால் பதறிப்போகிருேம். இதனைப் பாதுகாப்பதில் நம் வாழ்நாளில் பெரும் பாகத்தைச் செலவழிக்கிருேம். அப்படிப் பாதுகாப்பதனுல் இது நமக்கு நலம் செய்கிறதா என்ருல், இல்லை. நம்மை வாழ்வில் ஆழ்ந்து போகுமாறு இது அமிழ்த்துகிறது, பெரிய மூட்டையாக, பாரம் பொருந்திய மூட்டையாக, இருந்து மீட்டும் மீட்டும் அச்சத்தை உண்டாக்கி இந்திரியங்களின் பசியை ஆற்றுவதற்குரிய செயல்செய்து பிறவியில் ஆழ்த்துகிறது.

இவ்வாறு வாழ்கிருேமே, இது நிலையான வாழ்வாக இருக்கிறதா என்ருல், இல்லை; இது நிலையற்றது.

''நீரில் எழுத்தாகும் யாக்கை''

என்பார் குமர குருபரர். இது பொய் வாழ்வு. நதியிலுள்ள நீர் ஓரிடத்தில் நில்லாமல் ஓடிக்கொண்டிருப்பதுபோல இந்த வாழ்வு ஓடுகின்றது.

நதிதனை அன்ன பொய்வாழ்வில்

என்கிருர் அருணகிரியார்.

## வாழ்க்கையில் பற்று

நதியில் அகப்பட்டுக் கொண்டவர்களுக்கு அந்த ஆற்றிலே அன்பு இருந்தால் பயன் இல்லை. ஒன்று, கரை சேர வேண்டுமென்ற எண்ணம் இருக்க வேண்டும்; அல்லது கடலைச் சார வேண்டுமென்ற எண்ணம் இருக்க வேண்டும். கடலைப்பற்றிய எண்ணமே வருவதில்லை. கரையைப் பற்றிய எண்ணந்தான் இயல்பாக வரும். ஆனால் வாழ்க்கையில் ஈடுபட்ட மனிதனோ அடுத்த பிறவி நல்ல பிறவியாகவரவேண்டுமென்று எண்ணுவது இல்லை. பிறவியே இல்லாத கருணைக் கடலில் கலக்கவேண்டுமென்று எண்ணுவதும் இல்லை. இப்போதுள்ள வாழ்க்கையில் இன்னும் நெடுங்காலம் இருக்க வேண்டுமென்றே ஆசைப்படுகிறான்.

> "நெடுநாள் இருந்த பேரும், நிலையாகவே இன்னும்
> காயகற்பம் தேடி நெஞ்சுபுண் ஆவர்"

என்று தாயுமானவர் பாடுவார். இந்த வாழ்வில் அத்தனை அன்பு நமக்கு இருக்கிறது. உடம்பு எத்தனையோ துன்பத்தைத் தருவது; நோயைப் பெறுவது; பசி முதலிய குறைபாடுகளையுடையது. இது தெரிந்தும் இதனைப் போற்றி வாழ்கிறோம். நோய் வந்த உடம்பை விட்டுவிட்டு நீங்கிவிடலாம் என்ற எண்ணம் வருவது இல்லை. அழுகி ஒழுகும் உடம்பு உடையவர்களும் நினைத்தால் தற்கொலை செய்து கொள்வதற்குரிய வாய்ப்பு இருக்கவும், அவ்வாறு செய்வதில்லை. இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ என்ற அச்சமே காரணம்; அல்லது பழகின இந்த உடம்பிலுள்ள பற்று அவ்வாறு செய்ய விடுவதில்லை. இதையே நான் என்று நினைத்து வளர்த்து வருகிறோம். இப்படி அமைந்த உடம்பு நமக்கு நலம் செய்வதாக இருந்தால் குற்றம் இல்லை. இதுவோ நரம்பால் பொதிந்த பொதி. மாடு பொதி சுமந்தால் அதற்கு எந்த விதமான லாபமும் இல்லை. பொதியினுடைய பாரம் கழுத்தை அமிழ்த்தும். அப்படித்தான் உயிருக்கு உடம்பு பெரும் துன்பத்தைத் தருகிறது. ஆனால் உடம்பைப் பாரம் என்றே நாம் எண்ணுவது இல்லை.

## உடம்பில் அருவருப்பு

ஞானிகளுக்கு இந்த உடம்பே பெரிய பாரமாகத் தோற்றும்.

"ஊற்றைச் சரீரத்தை ஆபாசக் கொட்டிலை ஊன்பொதிந்த
பீற்றல் துருத்தியைச் சோறிடும் தோற்பையைப் பேசரிய
காற்றில் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல்செய்தே
ஏற்றுத் திரிந்துவிட் டேன்இறை வாகச்சி ஏகம்பனே"

என்று இந்தப் பாரம் தாங்காமல் பாடினார் பட்டினத்தார்.

உடற்பொறை என்று இதனைச் சொல்வார்கள். உயிருக்குப் பாரமாக இருப்பதனால் உயிர்ப்பாரம் என்றும் சொல்வது உண்டு. பரதன் இராமனைப் பிரிந்த ஏக்கத்தினால் இந்த வாழ்க்கையில் வெறுப்புக்கொண்டான். அவன் தன் உடம்பைப் பெரிய பாரமாகச் சுமந்தான்.

"உயிர்ப்பாரம் குறைந்து தேய"

என்று சொல்வதாகக் கம்பர் அமைக்கிறார்.

வாழ்க்கையில் இந்தச் சுமையைச் சுமந்து கொண்டுள்ள மனிதன் மீண்டும் அந்த வாழ்க்கையில் அன்புடன் போய்க் கொண்டிருக்கிறான். சில சமயங்களில் அதனால் விளைகிற துன்பம் தெரிகிறது, அறிவாளிகளுக்கு. உண்மையான ஞானம் யாருக்குத் தலைப்படுகிறதோ அவர்களுக்கு முதலில் இந்த உடம்பிலே அருவருப்பு உண்டாகும். உயிர்க்கூட்டத் தினிடத்து அருவருப்பு அன்று; உலக வாழ்வில் அருவருப்பு.

அருணகிரிநாத சுவாமிகள் அந்த நிலையில் நிற்பவரைப் போலப் பேசுகின்றார்.

நதிதனை அன்ன பொய் வாழ்வில் அன்பாய்
நரம்பால் பொதிந்த
பொதிதனையும் கொண்டு திண்டாடுமாறு எனைப்
போதவிட்ட

விதிதனை நொந்து நொந்து இங்கே என்றன்
மனம் வேகின்றதே

என்கிறார்.

## திண்டாட்டம்

இந்தப் பொய்வாழ்வில் உடம்பைச் சுமந்துகொண்டு போவதில் கொண்டாட்டம் இல்லையாம்; திண்டாட்டந் தானும். பெரும்பாலும் உடம்பைச் சுமந்துகொண்டு பலர் கொண்டாட்டத்தில் ஈடுபட்டு இருக்கிறார்கள். இந்த உடம்பைப் பெருக்க வேண்டுமென்றும், இதன் கனம் ஏற வேண்டுமென்றும் ஆசைப்பட்டுக் கனம் ஏறிவிட்டால் கொண்டாட்டம் அடைகிறார்கள். அதிகமாகச் சுமையை ஏற்றிக்கொள்வதில் எந்த மாடாவது கொண்டாட்டத்தை அடையுமா? மாட்டுக்குள்ள அறிவுகூட நமக்கு இருப்பது இல்லை. கனம் ஏற ஏற நமக்குக் கொண்டாட்டம் மிகுதியாகிறது. ஆனால் பெரியவர்களுக்கு இந்த உடம்பைக் கண்டு திண்டாட்டம் ஏறுகிறது. நரம்பால் பொதிந்த இந்த ஊற்றைச் சரீரத்தை அருவருக்கிறார்கள். பிறர் உடம்பில் நோய் வந்தால் அதைக் கண்டு அருவருக்கிறோம். மற்றவர்களுடைய உடம்பு அசுத்தமாக இருந்தால் அதைக் கண்டு அருவருக்கிறோம். ஆனால் அதே நோயும், அசுத்தமும் நம் இடத்தில் இருக்கின்றன என்பதை மறந்துவிடுகிறோம். தோல் பளபளவென்று இருப்பதை மாத்திரம் கண்டு ஏமாந்து போகிறோம். சாக்கைத் திருப்பிப் போட்டமாதிரி உடம்பின் உள்ளே இருப்பதை அறிவினால் திருப்பிப்போட்டு எண்ணிப் பார்த்தால் நம்மால் சகிக்க முடியாது. அந்த எண்ணம் யாருக்கு வருகிறதோ அவர்களுக்கு இந்த உடம்பினால் கொண்டாட்டம் உண்டாகாது; திண்டாட்டம் உண்டாகும். இத்தகைய திண்டாட்டம் நமக்கு ஏன் வந்தது? இந்த உலகத்தில் பிறந்ததனால், வாழ்க்கை என்னும் நதியிலே நாம் தத்தளிக்கிறோம். உடம்பாகிய

சுமையைச் சுமந்துகொண்டு தத்தளிக்கிறோம். நமக்கு ஒரு புணையில்லை. கரையையும் காணவில்லை. இதிலே வந்து திண்டாடும்படியாக விட்ட காரணம் எது? அதுதான் விதி.

**திண்டாடுமாறு எனைப் போதவிட்ட விதிதனே.**

## விதியை நோதல்

இந்த வாழ்வில் நாம் முன்செய்த நல்வினை, தீவினை ஆகியவற்றின் பலன்களை அநுபவிக்கிறோம். இந்த வாழ்க்கை ஓட்டத்தில் நம்மைப் புகுத்திவிட்டது விதி அல்லது ஊழ். அந்த ஊழ்வினையை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். எவ்வளவோ சமயங்களில் தலைவிதி என்று நாம் நொந்து கொள்வதில்லையா? நாம் ஏதேனும் துன்பம் அடைந்தால் அப்போதுதான் நொந்து கொள்கிறோம். துன்பம், இன்பம் என்ற இரண்டுமே இந்த உடம்பிலுள்ள ஐந்து இந்திரியங் களின் அநுபவங்கள். அந்த இரண்டையும் அடைகின்ற இந்திரியங்களும், அவற்றுக்கு இடமாகப் பெரிய சுமையாக இருக்கும் உடம்புமே விதியினால் வந்த விளைவு. இந்த உடம்பே இல்லாவிட்டால் துன்பமே இல்லை; இன்பமும் இல்லை. எல்லாவற்றுக்கும் மூலமாக, இடமாக இருக்கிற இந்த உடம்பைத் தந்தது விதி. அதைத்தான் நொந்து கொள்ள வேண்டும்.

**விதிதனை நொந்து நொந்து இங்கே**
**என்றன் மனம் வேகின்றதே.**

வாழ்க்கையில் நாம் பிரயாணம் செய்து கொண்டிருந் தாலும் இறைவன் திருவருளால் நமக்கு அறிவு என்ற ஒன்று கிடைத்திருக்கிறது; முன்னாலே பட்ட துன்பத்தையும், அதைக்கொண்டு இனி வருகின்ற விளைவினையும் எண்ணிப் பார்க்க நமக்கு அறிவு இருக்கிறது. இந்த அறிவினால் எண்ணிப் பார்க்கவேண்டும். நம்முடைய துன்பங்களுக்கு யார் யாரோ காரணம் என்று எண்ணித் தடுமாறுகிறோம்; அது தவறு. யாரையும் நொந்துகொண்டு பயன் இல்லை.

## புகலிடம்

இப்படியே போய்க்கொண்டிருக்கிற வாழ்க்கைக்குப் புகல் இடம் ஒன்று வேண்டும். 'விதியினுல் நதி போன்ற வாழ்வில் நரம்புப் பொதியாகிய உடம்பைச் சுமந்து திண்டாடுகிற எனக்குக் கதி ஒன்று வேண்டுமே! எந்தக் கதியினையும் காண வில்லையே!'' என்று சொல்கிருர் அருணகிரிநாதர்.

**கதிதனை ஒன்றையும் காண்கின்றிலேன்.**

கதி என்பது புகலிடம். நதியில் போகிற பொருளுக்கு மூன்று கதி உண்டு; இரண்டு கரைகள், முடிவிடம் ஆகியவை. நாம் பிறக்கும் பிறப்பு வகையைக் கதி என்று சொல்வார் கள். நல்ல கதி, கெட்ட கதி ஆகிய இரண்டும் கரைகள்; நல்ல பிறப்பு ஒரு கரை; கெட்ட பிறப்பு ஒரு கரை. இந்த வாழ்வுக்குப் பிறகு ஏதேனும் பிறப்பு எடுத்தால் இதிலும் உயர்ந்ததாக இருக்கலாம்; அல்லது இதிலும் தாழ்ந்ததாக இருக்கலாம். இந்த இரண்டு கரைகளையும் சாராமல் நேரே கடலில் போய்க் கலப்பதும் உண்டு. கடலில் கலந்தால் மீட்டும் திரும்புவது இல்லை. அப்படி இறைவனேடு ஒன்று கலந்த ஆருயிர் மீட்டும் இந்தப் பிறவியில் புகாது.

இப்படி மூன்று வகையான கதிகளும் உயிருக்கு உண்டு. பெரும்பாலான உயிர்கள் தாழ்ந்த பிறப்பை அடைகின்றன. சில உயிர்கள் உயர்ந்த பிறப்பை அடைகின்றன. மிகச் சில உயிர்களே முடிந்த முடிபாக ஆண்டவனுகிய கருணைக் கட லோடு ஒன்றுபடுகின்றன.

**கதிதனை ஒன்றையும் காண்கின்றிலேன்!**

மூன்று கதியில் மிக உயர்ந்த கதி இறைவனேடு கலக்கிறது. ''அந்தக் கதி எனக்கு இப்போது தோன்றவில்லையே!' என்று புலம்புகிருர்.

### கந்த

முருகனை விளித்துப்புலம்புகிருர்; ''முருகா, நீ கந்தனுகத் தோன்றினவன் அல்லவா? கங்கையில் வந்த பிறகு, சரவணப் பூம்பொய்கையில் மிதந்து அங்கே திட்டில் பிரிந்து நின்ற

திருமேனி ஆறும் ஒன்ருக உமாதேவியால் அணைக்கப்பெற்றுக் கந்தன் என்ற திருநாமத்தை அடைந்தவன் அல்லவா? ஆற்றில் வந்து பொய்கையில் மிதந்து மேட்டிலேறி உலகத்திற்கு நலம் செய்யும் ஒரு திருமேனியைப் படைத்த நீ இந்தப் பொய் வாழ்வில் ஓடுகிற ஓட்டத்தைத் தடுத்து என்னையும் நிலையாக நிறுத்த வேண்டும்'' என்கிருர், இந்தக் குறிப்பை வைத்து.

கந்த

என்ருர்.

## வேல் முருகா

இருட்டில் ஆற்றில் நடக்கிறவன் அல்லவா இந்தப் பிரயாணி? அந்த இருட்டுப் போவதற்கு ஒளிவேண்டும். சூரியன் தோன்றிஞல் கரை கண்ணில் படும். அதை அடைய வேண்டும் என்ற எண்ணம் உண்டாகும். இப்போது இரவில் மிதந்து கொண்டிருக்கிருன். இரவு என்பது அறியாமை. 'நம் உடம்பு நமக்குச் சுமை; இந்த வாழ்வு நம்முடைய புண்ணிய பாவ வினைகளின் விளைவாக உண்டாகியது. இந்த வாழ்வுக்கு அப்பால் பிறப்பற்ற இன்பம் ஒன்று உள்ளது' என்ற எண்ணங்கள் அறிவு உடையவனுக்குத்தான் தோற்றும். இவற்றை எண்ணுமல் நாம் பெற்ற பொருளைப் பெரிதாக, நிலையுடையதுபோல, எண்ணச் செய்வது அறியாமை. அறியாமை நீங்கிஞல் நம் நிலை புலப்படும். துன்பப்படுகிறவனுக்கு, இன்பம் ஒன்று உண்டென்ற எண்ணம் வேண்டும். பின்பு அதை அடையும் முயற்சி வர வேண்டும்.

எல்லாவற்றுக்கும் மூலமாக, நம் நிலையை உணர்ந்து கொள்ளச் செய்யும் ஒளி வேண்டும். முருகன் அறியாமையாகிய இருளை நீக்குகின்ற ஞான ஒளியுடையவன். அவன் ஞான பண்டித சாமி; ஞானமே உருவமாக உள்ள வேலைத் தன் திருக்கரத்தில் வைத்திருக்கிருன். அது அடியார்களது

உள்ளத்திலுள்ள அறியாமை இருளைப் போக்கி, நலம் செய்கிறது. ஆகவே இருட்டில் ஆற்றில் சுமையோடு மிதக்கின்ற மனிதன், மேட்டில் விளக்கை வைத்துக் கொண்டிருக்கும் பெரியவரைப் பார்த்து, ''அப்பனே, என்னைக் கரையேற்ற வேண்டும்; ஒளி காட்டவேண்டும்'' என்று சொல்வதைப் போல,

கந்த, வேல்முருகா!

என்றார்.

வினையால் அமைந்த வாழ்க்கையில் இறுதியே இல்லாமல் பிரயாணம் செய்யும் ஆருயிர் அறிவு பெற்று, முதலில் உடம்பு பெரும் சுமை என்பதை உணர்கிறது. பின்பு இதற்கு முடிவு ஒன்று வேண்டுமென்ற எண்ணம் கொள்கிறது. தன் துன்பங்களுக்குக் காரணம் அயலார் என்ற எண்ணம் மாறி' விதி என்ற உண்மையைத் தெரிந்து கொள்கிறது. பின்பு இந்த நதி போய்ச் சங்கமம் ஆகும் இடமாகிய கடல் ஒன்று உண்டென்பதை உணர்ந்து அதனைச் சார்வதற்கு ஆசைப்படுகிறது. இந்த எண்ணங்களை இந்தப் பாட்டுச் சொல்கிறது.



கதிதனை ஒன்றையும் காண்கின்றி
　　லேன்கந்த! வேல்முருகா!
நதிதனை அன்னபொய் வாழ்வில்அன்
　　பாய்நரம் பால்பொதிந்த
பொதிதனை யும்கொண்டு திண்டாடு
　　மாறுஎனைப் போதவிட்ட
விதிதனை நொந்துநொந்து இங்கேஎன்
　　றன்மனம் வேகின்றதே.

[கந்த வேளே, வேலாயுதம் கொண்ட முருகப்பெருமானே, அறிவில்லாத யான் புகலிடம் எதனையும் அறிந்திலேனே! ஆற்றைப் போன்ற நிலையற்ற வாழ்க்கையிலே விருப்பம் உடையவனாய், நரம்பினால்

கட்டியிருக்கும் உடம்பாகிய பாரத்தையும் சுமந்து கொண்டு அல்லற் படும்படி என்னைப் போகவிட்ட விதியைப் பலகால் நொந்து கொண்டு இவ்வுலகில் என் மனம் வருந்துகிறதே! இனி யான் என் செய்வேன்!

கதி-புகலிடம்; "கதியாய் விதியாய்" என்று அநுபூதியில் வருகிறது. காண்கின்றிலேன்: காணல்-இங்கே அறிதல். கந்தன்; பார்வதி தேவி முருகனுடைய உருவங்கள் ஆறையும் ஒன்ருக்கி அணைத்தாள். அப்போது கந்தன் என்னும் திருநாமம் முருகனுக்கு அமைந்தது.

"சரவ ணந்தனில் தனதுசேய் ஆறுருத் தனையும்
இருக ரங்களால் அன்புடன் எடுத்தனள் புல்லித்
திருமு கங்கள்ஓர் ஆறுபன் னிருபுயம் சேர்ந்த
உருவம் ஒன்றெனச் செய்தனள் உலகம்ஈன் றுடையாள்."

"எந்தை சத்திகள் உயிரெலாம் ஒடுங்குறும் எல்லை
முந்து போலஒன் ருகியே கூடிய முறைபோல்
அந்தம் இல்லதோர் மூவிரு வடிவும்ஒன் ருகிக்
கந்தன் என்றுபேர் பெற்றனன் கவுரிதன் குமரன்"

என்று கந்தபுராணம் கூறும்.

போதி-சுமை. அன்பு என்பதை வாழ்வுக்கும் ஆக்கலாம்; போதிக்கும் சார்தலாம். திண்டாடுதல்-நிலையின்றி அலைந்து துன்புறுதல். போத செல்ல. இங்கே-இவ்வுலகில். வேதல்-துன்பத் தால் புழுங்குதல்; அதனுல் துன்பத்தைத் தாபம் என்று வடமொழி யில் கூறுவர்.]

விதியின் விளைவாகிய வாழ்க்கையினின்றும் ஏறி இன்ப வாழ்வை அடைவதற்கு முருகனே புகலிடம் என்பது கருத்து.

இது கந்தர் அலங்காரத்தில் 98-வது பாட்டு.

# கொழு கொம்பு

## கூடி வாழ்தல்

'மனம் வேகின்றதே' என்று வருந்திய அருணகிரிநாதர் மறுபடியும் தம்முடைய மனம் பதைக்கின்றதைப் பற்றிப் பாடுகிறார்.

உலகம் முழுவதும் மக்கள் கூடியிருக்கிறார்கள். எத்தனையோ விதமான கருவிகளை வைத்துக்கொண்டு அவர்கள் தங்கள் செயலைச் செய்கிறார்கள். கூட்டம் கூட்டமாக வாழ்வது மனிதர்களுக்கு இயல்பு. ஊர் என்றும், நாடு என்றும், சமுதாயம் என்றும் பெயர் சொல்லிக் கூடிக் கொண்டு வாழ்கிறார்கள். இடையிடையே சண்டை போட்டாலும் பெரும்பாலும் கூடிக்கொண்டுதான் எல்லாக் காரியங்களையும் செய்கிறார்கள். ஒருவருக்கு ஒருவர் துணை நின்று பல காரியங்களைச் செய்துகொள்கிறார்கள். இருவர் கூடியும், மூவர் கூடியும், பலர் கூடியும், ஆயிரக்கணக்கில் மக்கள் கூடியும் காரியத்திற்கு ஏற்றபடி துணையைப் பெற்று, உலகத்துச் செயல்களை எல்லாம் நிறைவேற்றிக் கொள்கிறார்கள். ஆகவே, எங்கே பார்த்தாலும் நாம் செய்யும் காரியத்திற்குத் துணையாக, நம்முடைய செயலுக்கு உதவி செய்பவராக, பலர் இருப்பதைக் காண்கிறோம். இவை எல்லாம் உலக வாழ்வுக்குச் சரிதான்.

## பிறர் உதவி

சாப்பாடு சாப்பிட வேண்டுமானுல் வேறு சிலரை நாடி அவர்களது உதவியைப் பெற்று உண்ணலாம். ஏதேனும் ஒரு சுமையைத் தூக்கிக்கொண்டு போகவேண்டுமானுல் இன்னும் இரண்டொருவரைப் பிடிக்கச் சொல்லித் தூக்கிக் கொண்டு போகலாம். ஆற்றுக்குப் பாலம் கட்டவேண்டும். காட்டுச்குப் பாதை போடவேண்டும்; வீடு கட்டவேண்டும்; மதில் எடுக்கவேண்டும்; கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்; கல்வி கற்க வேண்டும்.—இப்படி வருகிற சமுதாய வேலேகளுக்குப் பலர் முயன்று பணம் திரட்டி, பல மனிதர்களேயும் கூட்டி அந்த அந்த வேலேகளேச் செய்து மக்களே வாழ வைக்கிறுர்கள். இவை யாவுமே உலகியல் வாழ்வு. இவற்றில் ஒருவர் மற்றெருவருக்கு உபகாரமாக இருந்து துணே செய்யலாம்.

## ஆன்ம நெறி

ஆனுல் உயிர் வாழ்வாகிய ஆன்ம நெறியில் தாம் தாமே முயன்ருலொழிய வேறு வகையில் நன்மை பெற இயலாது. தொண்டர் கூட்டத்தில் கலந்து அவர்களுடைய பழக்க வழக்கங்களேத் தெரிந்து கொள்வதனுல் நமக்கு அறிவு விளக்கம் உண்டாகுமேயொழிய அநுபவம் வாராது. அதற்குச் சொந்த முயற்சி வேண்டும். இதனே முன்பும் பல முறை நாம் நினேவு படுத்திக்கொண்டிருக்கிறேம்.

உயிர் செல்லுகின்ற பயணத்தில் இந்த உடம்பு இருச்கிற வரைக்கும் சிலர் கூடி ஒன்றுபடலாம். ஆனுல் இந்த உடம்பை விட்டு வேறு உடம்பை இந்த உயிர் எடுக்கும் போதும், நரகம் சொர்க்கமாகிய அநுபவங்களேப் பெறும் போதும் இப்போது நமக்கு யார் துணேயாக இருக்கிருர் களோ அவர்கள் துணேயாக இருக்க முடியாது. ஓரிடத்தில் துணேயாக நிற்பவர் மற்ருேரிடத்தில் துணேயாக நிற்க

இயலாது. சாலையில் மோட்டாரில் போகிறவரைக்கும் மோட்டாரோட்டி துணையாக இருப்பார்; ஆற்றில் அவர் துணை பயன்படாது; ஓடம் ஓட்டியின் துணைவேண்டும். எத்தனை பணம் இருந்தாலும், மனிதக் கூட்டு இல்லாமல் எத்தனை காரியங்கள் தடைப்பட்டிருக்கின்றன! அங்கே பணம் இருந்தாலும் மக்கள் இல்லாமையினால் குறை நேருகிறது. மனைவியினால் செய்வதற்குரிய காரியம் சில; மக்களால் செய்வதற்குரிய காரியம் சில; குருவினால் கிடைக்கிற நலம் சில. இப்படி ஒவ்வொரு காரியத்திற்கும், ஒவ்வோர் இடத்திற்கும், ஒவ்வொரு காலத்திற்கும் ஏற்றபடி துணைகள் அமைகின்றன.

## பெரிய துணை

எல்லாக் காலத்துக்கும், எல்லா இடத்திற்கும், எந்த நிலைக்கும் ஒத்தபடி நம்முடைய உயிருக்குத் துணையாக யாரேனும் வரக்கூடும் என்றால் அவர் நம்முடைய உயிரோடு ஒட்டியவராக இருக்கவேண்டும். இப்போது நம்முடைய உயிரோடு ஒட்டியது உடல் என்று தோன்றுகிறது. ஆனால் இந்த உடலையும் உதைத்துவிட்டு உயிர் தனியே போய் விடுகிறது. அப்போது இந்த உடம்பினால் நமக்குப் பயன் இல்லை. உயிரோடு என்றும் ஒட்டி, அது செல்லும் இடங்களில் எல்லாம் துணையாக நிற்பவர் யாரேனும் உண்டா என்று ஆராய்ச்சி செய்யவேண்டும். உயிருக்கு உயிராக இருக்கும் இறைவனே அத்தகைய பெரிய துணையாக வருவான். அவன்தான் எல்லாக் காலத்தும், எல்லா இடத்தும், எல்லா உயிர்களுக்கும், எந்த நிலையிலும் துணையாக நிற்பவன். அவன் நம்மைப் பற்றிக் கொண்டிருக்கிறான். அது போதாது. நாம் அவனை இறுகப் பற்றிக் கொள்ளவேண்டும். அவனுடைய திருவடி யாருக்குத் துணையாகக் கிடைக்கிறதோ அவர்கள் என்றும் குன்றாத இன்பத்தை அடைவார்கள்.

## ஆதாரமும் ஆதேயமும்

வேறு ஒருவரைத் துணையாக எண்ணி வாழ்ந்தால் அவருக்கு வலிமை குறையும்போது அவரால் ஒரு பயனும் இல்லாமல் போய்விடுகிறது. ஆதாரமாக இருக்கிற பொருள் பலம் அற்றுப்போனால் அதன்மேல் இருக்கும் ஆதேயப் பொருளுக்கும் ஆபத்து வந்துவிடும். மாடிமீது பொருள்களை நிரப்பி வைத்திருக்கிறோம். மாடித் தளம் இடிந்துவிட்டால் அந்தப் பொருள்கள் கீழே விழுந்துவிடும். உலகத்திலுள்ள எல்லா வகையான துணைகளும் இப்படியே ஒரு காலத்தில் விழுந்துவிடும். ஆகையால் அழியாத் துணை எதுவும் இந்த உலகில் இல்லை. என்றைக்கும் அழியாமல் இருக்கிற சச்சிதானந்த சொரூபியாகிய ஆண்டவன் ஒருவன்தான் ஆருயிர்களுக்கு அழியாத் துணையாக இருக்கிறான். அந்தத் துணையைப் பெற்றுக்கொண்டவர்களுக்கு எல்லாக் காலத்திலும் இடர் இல்லாமல் வாழும் வாழ்வு கிடைக்கும்.

## பக்தர்கள்

அத்தகைய துணையைப் பெறவேண்டும் என்ற ஆசையையே பக்தி என்று சொல்வார்கள். ''உலகத்தில் வேறு யாரும் துணையில்லை: நீதான் துணை'' என்று ஆண்டவனுடைய திருவடியைப் பற்றிக்கொள்கிறவர்கள் யாரோ அவர்களே பக்தர்கள்.

''நின் சரணல்லால் சரணில்லை''

என்று புகல் அடைந்தார்கள் ஆழ்வார்கள்.

இந்த எண்ணங்களை மனத்தில் வைத்துக்கொண்டு அருணகிரியார் தம் மனம் வாடிப் பதைப்பதுபோல ஒரு பாட்டைச் சொல்கிறார்.



## அருணகிரியார் விண்ணப்பம்

துணை எதுவும் இல்லாமல் தன்னந் தனியாக நாம் நிற்கிறோம். துணை இல்லை என்று சொல்வதைவிடத் துணை இருப்பதை அறிந்துகொண்டு பற்றிக்கொள்ளவில்லை என்று சொல்வது பொருத்தமாக இருக்கும். அறிவு இல்லாதவன் என்று சொல்வதைவிட அறிவை வெளிப்படுத்திப் பயன் கொள்ளாதவன் என்று சொல்வது பொருத்தம். எல்லோரிடமும் அறிவு இருக்கிறது. ஆனால் அதை வெளிப்படுத்திப் பயன்கொள்பவர் சிலரே. கல்வி என்பது அந்த அறிவைத் தூண்டித் தீய குணங்களைக் களைந்து நற்குணங்களை மலரச் செய்கிறது. அதுபோலப் பக்தி என்ற உணர்ச்சி இறைவனுடைய அருள் துணையை விளக்கமாக்கி நலம் செய்கிறது. அந்த உணர்ச்சி இல்லாதவர்கள், ஒவ்வொரு துணையாக நம்பி வாழ்ந்து அந்தத் துணைகள் எல்லாம் இறுதியில் பயன் அற்றுப் போக, ''நான் துணையில்லாமல் நிற்கிறேனே!'' என்று வாடுவார்கள். அந்த நிலையில் இருந்து அருணகிரியார் பேசுகிறார். ''எம்பெருமானே, பற்றிக் கொள்வதற்கு எந்தத் துணையும் இல்லாமல் நான் வாடுகிறேன். தாவிப் படர்வதற்குக் கொழுகொம்பில்லாத கொடிபோல என் மனம் தள்ளாடி வாடிப் பதைக்கின்றது'' என்கிறார்.

தாவிப் படரக் கொழுகொம்பு இலாத
　　　　தனிக்கொடிபோல்
பாவித் தனிமனம் தள்ளாடி வாடிப்
　　　　பதைக்கின்றதே.

## கொடியும் பந்தரும்

கொடி எப்போதும் படரும் தன்மையுடையது. அதற்கு ஆதாரமாக மண் இருந்தால் மாத்திரம் போதாது. அது வளர்ந்து நிலத்தில் படர்ந்தால் நல்ல காய் காய்த்து வளப்பமாக இராது. அது மேலே பந்தலில் ஓடிப் படரவேண்டும். பந்தலில் நன்றாகப் படர்கிற கொடி கொத்துக் கொத்தாகக்

காய் காய்த்து நல்ல பயனைத் தரும். பந்தருக்கும், கீழே உள்ள கொடிக்கும் இணைப்பாக இருப்பது கொழுகொம்பு. கொழுகொம்பைப் பற்றி மேலே மெல்ல ஏறி, பின்பு பந்தரில் படரும் கொடி மண்ணின் உரத்தையும், காற்றின் வளத்தையும், கதிரவனின் சக்தியையும் ஏற்றுக்கொண்டு நன்றாகப் படர்ந்து பயனைத் தரும். அப்படியின்றிப் பந்தல் இருந்தாலும், வளம் பொருந்திய மண்ணில் கொடி தோன்றினாலும், பந்தருக்கும் பூமிக்கும் இணைப்பாக ஒரு கொழுகொம்பு இல்லாவிட்டால் கொடி கீழே படர்ந்து பலரால் மிதிக்கப்பெற்று அழிவுறும்.

## மனம் உயர்தல்

மனம் கொடி போலப் படைக்கிறது என்று சொன்னார். மனிதனுடைய மனம் வரவர உயரவேண்டும்.

"உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்"

என்று வள்ளுவர் சொன்னார். உயர்ந்த பொருளைப் பற்றிக் கொண்டு உயர வேண்டும். மேலுள்ள பொருளை நாடி நாம் மேலே ஏறுகிறோம். மாடியின் உச்சிக்கும், மலையின் மேலும் நாம் ஏறுவதற்குக் காரணம் நாம் இருக்கும் இடத்தைவிட உயர்ந்த இடத்தைப் போய் அடையவேண்டுமென்ற ஆசை தான். அப்படி, மனம் மேலேயுள்ள பந்தரைப் போன்ற சிறந்த பொருளை அடையவேண்டுமென்று எண்ணி முயல வேண்டும். அந்த முயற்சிக்குக் கொழுகொம்புபோலப் பெரியவர்கள் வருகிறார்கள். குருவினுடைய உபதேசம் நமக்குப் பயன்படுகிறது. பந்தர் ஆண்டவனுடைய அருள் நலம் என்று சொன்னால் அந்தப் பந்தருக்குக் கொடியை ஏற்றிவிடுகின்றகொழுகொம்பு நல்லவர்களுடைய உபதேசம் என்று சொல்லலாம்; அல்லது அடியார்களுடைய தொடர்பு என்று சொல்லலாம். அவை எல்லாம் இறைவனுடைய திருவருளால் வருவன. ஆண்டவனுடைய திருவருளால் அவனோடு இணைகின்ற இன்பம் கிடைக்கும். ஒரு வகையில்

பார்த்தால் அருளாகிய கொழுகொம்பைப் பற்றிச்கொண்டு இன்பமாகிய பந்தரில் படர வேண்டும்.

### உள்ளத்துக்கும் உயிருக்கும் உள்ள ஒற்றுமை

மனத்திற்கும் உயிருக்கும் வேறுபாடு தோன்றுவது இல்லை. சில சமயங்களில் உயிர் என்ற பொருளில் உள்ளம் என்ற சொல்லைச் சித்தாந்த நூல் பயன்படுத்துகிறது. ''நான் பதைக்கிறேன்'' என்பதை, ''என் மனம் பதைக்கிறது'' என்று சொல்வதும் ஒரு சம்பிரதாயம். தனக்கும் மனத்திற்கும் இருக்கும் நெருங்கிய தொடர்பையொட்டித் தன்னுடைய அநுபவங்களை மனத்தின் அநுபவமாக்கிச் சொன்னுர் என்று சொல்லலாம்.

மேலே உயர்ந்திருக்கிற பந்தரில் கீழே வாடிப் பதைக்கின்ற கொடி தானுகவே ஏற முடியாது. பந்தருக்கும், பூமிக்கும் இணைப்புப் போலே ஆண்டவனுடைய திருவருள் வரவேண்டும். ஆண்டவனுடைய திருவருளுருவமாக இருக்கிற திருவடியை எண்ணுகிருர். ஆண்டவனுடை திருவடி பூமியில் நடந்து இங்கேயுள்ள குழந்தைகளை எல்லாம் பற்றிக்கொள்ளச் செய்து மேல்நிலைக்கு ஏற்றுவது.

### திருவடி

**காவிக் கமலக் கழலுடன் சேர்த்தெனைக்**
**காத்தருளாய்**

என்று வேண்டுகிருர். ஆண்டவனுடைய செங்கமலப்பாதம் மக்களை உயர்ந்த நிலைக்கு ஏற விடுவது. பிறவிப் பெருங்கடலுக்குப் புணையாக உதவுவது அது. ஆண்டவனுடைய பாதம் பூமியில் பதிகின்றது. பொதுவாகத் தேவர்களுடைய பாதம் மண்ணில் பதியாது என்று சொல்வார்கள். அவர்கள் வானுலகத்தில் வாழ்கிருர்கள். இறைவனே தேவர்களுக்கெல்லாம் பெரிய தேவன். அவனுக்கும் திருவடி நிலத்தில்

பதியாமல் இருப்பதே இயல்பு. ஆனால் அவன் பூமியிலுள்ள உயிர்கள் வாழவேண்டுமென்று கருதிப் பூமியில் திருவடி வைத்து நடக்கிறான். நமக்கு அவனுடைய திருவுருவம் முழுவதையும் கண்டு அறிவதற்குரிய ஆற்றல் இல்லை. நேரம் இல்லை. நமக்கு அண்மையில் இருப்பது அவன் திருத்தாள் தான்.

"வேதங்கள் அறைகின்ற உலகெங்கும் விரிந்தனநின்
பாதங்கள இவைஎன்னில் படிவங்கள் எப்படியோ"

என்று கம்ப ராமாயணம் பாடுகிறது. இறைவன் திருவடி எங்கும் படர்ந்திருக்கிறது. நமக்கும் அந்தத் திருவடிக்கும் நெருக்கம் அதிகம். அப்படி நெருங்கிய திருவடியை மறந்து அதனோடு சாராமல் ஒதுங்கி நிற்கிறோம்.

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது"

என்று வள்ளுவர் சொன்னார். தனக்கு ஒப்பு இல்லாத ஆண்டவனுடைய பாதாரவிந்தங்களைச் சேர்ந்தாலன்றி மனத்திலுள்ள கவலை யாருக்கும் போகாது என்பது பொருள். இங்கே, சேர்வது என்பதற்கு மனத்தில் தியானித்தல் என்று பரிமேலழகர் பொருள் எழுதுவார். ஆண்டவனை நாம் சார்ந்து நிற்பதாவது, நம்முடைய மனத்தில் அவன் திருத்தாளை எண்ணித் தியானம் செய்வது. அது கண்ணுக்குப் புலனாவது அன்று; கருத்துக்குப் புலனாவது.

கொழுகொம்பு இலாத தனிக்கொடிபோல்.

மனத்திற்கு, உயிருக்கு, கொழுகொம்பாக ஆண்டவன் கழல் விளங்குகிறது. அந்தக் கழல் நமக்கு அணிமையாக நின்றாலும் ஞானசொரூபமாக இருந்து பின்பு மோட்ச சாம்ராஜ்யமாக விளங்கும்.

"தொண்டர் கண்டு அண்டி மொண்டு உண்டிருக்கும் சுத்த
ஞானமெனும்
தண்டையம் புண்டரிகம்"

என்று அலங்காரத்தில் வருகிறது. அங்கே ஆண்டவனுடைய திருவடி ஞான மயமாக இருக்கும் என்று சொல்கிறார். ஞானந்தான் மோட்ச இன்பத்தைப் பெறுவதற்குரிய வழி. எது வழியாக இருக்கிறதோ அதுவே முடிந்த முடிபாக நிற்கிறது. இது ஆண்டவனுடைய அருளால் விளைகிற ஆச்சரியம்.

> "பொக்கக் குடிலிற் புகுதா வகைபுண்ட ரீகத்தினும்
> செக்கச் சிவந்த கழல்வீடு தந்தருள்"

என்பதில் பாதமே மோட்சமாக இருக்கும் என்று சொல்கிறார். உலகத்திலுள்ள உயிர்களுக்கு முதலில் தியானிப்பதற்குரிய பொருளாகிச் செந்தாமரை போல விளங்குவது ஆண்டவனுடைய திருத்தாள். அதுவே பிறகு அறியாமையைப் போக்கிப் பொருளின் தன்மையை நன்றாகக் காட்டும் ஞானமாகவும் நிற்பது. அதற்குமேல் பக்தர்களுக்கு அந்தப் பூங்கழலே மோட்சமாக உதவுவது. எனவே, பற்றிக்கொள்வதற்கும், மேல் ஏறுவதற்கும், மேலே போய்த் தங்குவதற்கும் வெவ்வேறு பொருள்கள் வேண்டாம். எது அடிநிலையில் நாம் பற்றிக்கொள்ளும் பொருளாக நிற்கிறதோ அதுவே நம்மை மேலே ஏற்றும் ஏணியாகவும், அப்பால் படுத்துறங்கும் படுக்கையாகவும் இருக்கிறது.

ஆண்டவனுடைய திருத்தாள் மனிதனுடைய தாளைப் போல ஊன் நிரம்பிய பொருளன்று. அது ஒரு தத்துவம். எல்லாவற்றுக்கும் மூலமாக நிற்பது அவன் தாள்தான். எல்லாவற்றுக்கும் முடிவாக நிற்பதும் அது. அது எல்லாவற்றையும் தாங்குகிறது. எல்லாவற்றுக்கும் மேலே நிற்கிறது. அடி என்பதற்கு அஸ்திவாரம் என்பது ஒரு பொருள். உலகத் தத்துவங்களுக்கு எல்லாம் மூலப் பொருளாகவும், அடியாகவும் நிற்பது ஆண்டவன் திருத்தாள். அது அடியாக மாத்திரம் அன்று; மிக உயர்ந்த பொருளாகவும் நின்று நீண்ட கொம்பாக உதவுகிறது. அதைப் பற்றிக்கொண்டவர்கள் மெல்ல அதன்மேல் ஏறி உயர்ந்த இன்பத்தை அடைவார்கள். மற்றத் துணைகளை

நம்பி அவற்ருல் உயிருக்கு யாதொரு பயனும் இல்லாமல் சோர்ந்துபோய், என்றைக்கும் துன்பம் இல்லாமல் வாழ வைக்கும் துணை எங்கே இருக்கிறதென்று தேடி, மனம் நைந்த பக்தர்களுக்கு, முருகன் திருவடி என்றைக்கும் மாருத துணையாக வந்து நிற்கும்.

## பிரபஞ்சச் சேறு

தள்ளாடி வாடிப் பதைக்கின்ற மனம் மேலே பரந்து நிற்கின்ற பந்தரில் ஏறுவதற்கு ஏற்ற கொழுகொம்பு இல்லாமல் அலைகிறது. பூமியில் வளருகின்ற கொடி கொழு கொம்பில் ஏறிப் பந்தரில் படராவிட்டால் நிலத்தில் படரும். மனம் எப்போதும் அலையும் தன்மையுடையது. ஒரு கணம்கூட நிலைத்து நில்லாதது. ஒரு கணத்தில் பதினுயிரம் எண்ணங்களை வளர்த்துக்கொண்டு சுழன்று திரிவது. உயர்ந்த எண்ணங்களை, மேலும் மேலும் நல்ல நிலை அடைவதற்குரிய சாதனைகளை, மனம் கொள்ளா விட்டால் அது மண்ணேடு மண்ணுக நின்று சேற்றில் அளைந்து, புழுதியில் படிந்து, அழுக்கில் துளைந்து, எப்போதும் சுற்றிக்கொண்டிருக்கும். புழுதியில் படர்கிற கொடிபோலப் பிரபஞ்சச் சேற்றில் உழன்று திரியும். கொடி நிலத்திலே படர்ந்து வீணுகாமல், கொழுகொம்பின் வழியே ஏறிப் பின்பு பந்தலை அடைந்து அங்கே படர்ந்து பயன் தருவது போல, நம்முடைய மனம் உலகியல் பொருளில் படர்ந்து அதனுல் அழுக்கு அடைந்து துன்பத்தையுற்று வெப்பம் பெற்று, தள்ளாடிப் பதைப்பதை விட்டு, ஆண்டவனுடைய திருவடியாகிய கொழுகொம்பைப் பற்றிக்கொண்டு மேலே போகவேண்டும். போய்ப் பேரின்பமாகிய பந்தரில் படரவேண்டும். அது தோன்றியது நிலமாளுலும், பயன் பெறுவது மேல் நிலத்தில். திருக்குறளில் ஒரு பாட்டு வருகிறது.

"உரன்என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து"

என்பது அது. இந்த உலகத்தில் ஐந்து பொறிகளாகிய யானையை அறிவாகிய அங்குசத்தால் அடக்கி ஆளுகிற ஞானி வீட்டு உலகத்திற்கு ஒரு வித்துப்போல நிற்கிறான் என்பது அதன் பொருள். இங்கே பரிமேலழகர், ''வீட்டு உலகத்தில் சென்று முளைத்தலினால் வித்து என்று சொன்னார்'' என்று பொருள் எழுதினார். வித்தைப் போடுவது மண்ணில். ஆனால் அதன் விளைவு மேலே தோன்றுகிறது. இந்த உலகத்தில் இருக்கும்போது உலகத்துப் பொருள்களோடு ஒட்டி அழுக்கேறிப் படர்ந்து விடாமல் நம்முடைய எண்ணங்களை உயர்த்திக் கொள்ளப் பழகினால் மெல்ல மெல்ல மனம் நல்ல இடத்தில் படரும். இருப்பது மண்தானே என்று எண்ணி ஏங்கக் கூடாது. தாமரை சேற்றிலே முளைத்தாலும் அதன் மலர் சேற்றைக் கடந்து தண்ணீருக்கு மேலே மலர்கிறது. தண்ணீர் எவ்வளவு ஆழமாக இருந்தாலும் அதற்கு மேல் தலையை நீட்டி மலரும் தன்மையுடையது தாமரை.

> ''வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
> உள்ளத் தனைய துயர்வு''

என்பது திருக்குறள் அதுபோல் நல்லவர்களுடைய மனம் இந்தப் பூமியிலே, உலக வாழ்விலே, இருந்தாலும் மிகமிக உயர்ந்த இறைவனுடைய திருவடித் துணை பெற்று மேல் நிலையை அடைகின்றது. ''அத்தகைய நிலை எனக்கு வரவில்லையே!'' என்று அருணகிரியார் ஏங்குகிறார்.

## அவன் திருவுள்ளம்

அந்த நிலை வரவேண்டுமானால் நாமாக முயன்று அடைய முடியாது. இறைவன் திருவருள் இருந்தாலன்றி அது நமக்குக் கிடைக்காது. நாம் அவனை அடைய வேண்டுமென்று நினைத்த அளவில் அது கைகூடுவது இல்லை. ஆண்டவன் நம்மைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று திருவுள்ளம் கொள்ள வேண்டும்.

"நினைப்பித்தால் நின்னை நினைப்பேன்"

என்று ஒரு பெரியவர் சொன்னார்.

"சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்க ளார வந்தனை"

என்று மணிவாகசப் பெருமான் சொல்வார். அவனை நாம் நினைப்பதற்கு அவன்தான் வந்து துணையாக நிற்கவேண்டும்.

"அவனரு ளாலே அவன்தாள் வணங்கி"

என்பது திருவாசகம் "உன்னுடைய கமலக் கழலுடன் நான் சேரவேண்டுமென்று முயன்றால் பயன் இல்லை. என்னுடைய எல்லைக்குள் அகப்பட்டது அன்று அது. நீ உன்னுடைய கழலுடன் என்னைச் சேர்த்துக்கொள்வதற்குத் திருவுள்ளம் பாலிக்க வேண்டும்" என்று அருணகிரியார் சொல்கிறார்.

"பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே"

என்பது அப்பர் திருவாக்கு. நாம் அவனை நினைப்பதற்கு முன்னால் அவன் நம்மை நினைந்து தன்னிடத்தில் நமக்குப் பக்தியை உண்டாக்கவேண்டும்.

"என்னை நினைந்து அடிமை கொண்டென் இடர்கெடுத்துத்
தன்னை நினைக்கத் தருகின்றான்."

என்று நம்பியாண்டார் நம்பி பாடுகின்றார்.

ஆகவே, ஆண்டவன் நம்மிடத்திலுள்ள கருணையினால் நம் உள்ளத்திற்குள் கொழுகொம்பு நடுவது போலத் தன்னுடைய கமலக் கழலை நாட்டி அருளவேண்டும். கொடி தனக்கு வேண்டிய கொழுகொம்பைத் தானே நட்டுக்கொள்ளாது. கொழுகொம்பு நட்டால் அதனைப் பற்றிக் கொண்டு படரும்

ஆற்றல் அதற்கு உண்டு. நாம் மேலே ஏறுவதற்குரிய வழியை நினைக்கச் செய்து, தன் திருத்தாளைக் கொழு கொம்பாக நம்முள்ளத்தில் ஆண்டவனே பதித்து அருள வேண்டும்.

''உன்னுடைய காவிக் கமலக் கழலுடன் என்னைச் சேர்த்துக் காத்தருளவேண்டும். கொழுகொம்பில்லாமல் கீழே படர்ந்த கொடி ஆடு மாடுகளால் மிதிக்கப்பட்டுக் குலைவது போல நானும் பிரபஞ்சச் சேற்றிலே மிதியுண்டு அழிந்துவிடுவேன். உன்னுடைய கமலக் கழலாகிய கொழு கொம்பை என் உள்ளத்தில் நாட்டி அருளவேண்டும்'' என்று வேண்டுகிறார் அருணகிரியார்.

காவிக் கமலக் கழலுடன் சேர்த்தெனைக்
காத்தருளாய்;
தூவிக் குலமயில் வாகன னே, துணை
ஏதுமின்றித்
தாவிப் படரக் கொழுகொம் பிலாத
தனிக்கொடிபோல்
பாவித் தனிமனம் தள்ளாடி வாடிப்
பதைக்கின்றதே.

## மயில் வாகனன்

பிரபஞ்சத்தில் படர்ந்து பல வகையான அழுக்கு ஏறி யிருக்கிற மனம் ஆண்டவனுடைய கழலாகிய கொழு கொம்பைப் பற்றி மேலே ஏறத் தொடங்கினல் அது பயன் அடையும். மண்ணிலே அது தோற்றியதாக இருந்தாலும் அழுக்குடையதாக இருந்தாலும் இறைவனுடைய கழலின் சார்பு பெற்றுவிட்டால் அதுவே நமக்கு நல்ல கருவியாக, துணையாக நிற்கும். இதற்கு முருகப் பெருமான் வரலாற் றில் ஒரு நல்ல சான்று இருக்கிறது.

ஆண்டவனது வாகனம் மயில். இயல்பாகவே பிரண வத்தை மயிலாகக் கொண்டவன் அவன். பிற்காலத்தில்

சூரபன்மனேடு போர் செய்து அவனை வென்று, அவனை மயிலாகக் கொண்டு அவன்மேல் ஊர்ந்து வருகிருன். "முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும், நல்லவர்களுக்கும் இடுக்கண் செய்து, ஆயிரத்தெட்டு அண்டங்களுக்குத் தனி நாயகனுக இருந்து ஆண்டு செருக்கு மிக்கு வளர்ந்தவன் சூரபன்மன். நம்மை எதிர்ப்பவர் யார், நமக்கு நிகர் யார் என்று தருக்கி நின்ருன் அவன். தேவர்களுக்கு அச்சத்தை விளைவித்த பெரு வல்லமை உடைய அவனேடு ஆண்டவன் சென்று பொருதான். இதற்கு முன்பு அசுரேந்திரனுக இருந்த அவன் இறைவனுடைய வேலினல் கிழிக்கப்பெற்று இரண்டு கூருக ஆனுன். ஒரு கூறு சேவலாகவும், மற்ருெரு கூறு மயிலாகவும் ஆயின. மிகவும் கொடுமையான எண்ணமுடைய சூரன், பார்த்தாலே அஞ்சுவதற்குரியவனுகிய சூரன், எம்பெருமானது வாகனமாகி விட்டான். இறைவனது திருவடித் தொடர்பு பெற்றவுடன் அவன் வன்மை மாறிக் கொடுமையும் மாறி அசுரத்தனம் அடியோடு ஒழிந்து இறைவனுக்கு ஏற்ற வாகனமாகி விட்டான். அந்த வாகனம் தூயதாகி, தோகையுடையதாகி, அழகோடு நிற்கிறது. மிக உயர்ந்த பெருமையை அந்த மயில் பெற்றுவிட்டது. இயல்பாக அசுரேந்திரனுக இருந்தபோது சூரனுக்கு இத்தனை பெருமையில்லை; பழியே இருந்தது. ஆண்டவன் கழலுடன் சேர்ந்த பிறகே இந்தப் பெருமை அவனுக்கு உண்டாயிற்று. மிகமிகக் கொடியவர்கள் அசுரர்கள். அந்தக் கொடியவர்களுக்குள்ளே தலைவன் சூரன். கொடியவர்களுக்குத் தலைவனுகிய அவன் ஆண்டவன் திருக்கழலுடன் சேரும் பேறு பெற்றதும், அவனுக்குரிய வாகனமாகிவிட்டான்.

"தீயவை செய்தா ரேனும் குமரவேள் திருமுன் புற்ருல்
தூயவ ராகி மேலைத் தொல்கதி அடைவார் என்கை
ஆயவும் வேண்டும் கொல்லோ? அடுசமர் அந்நாட் செய்த
மாயையின் மகனும் அன்ருே வரம்பிலா அருள்பெற் ருய்ந்தான்"

என்று கச்சியப்ப சிவாசாரியார் பாடுகிறார். சூரன் கொடியவனாக இருந்தாலும் ஆண்டவனின் தொடர்பு பெற்றதால் அவன் தீமை மாறி உயர்ந்த பெருமையைப் பெற்றான். இறைவனோடு தொடர்பு பெற்றால் தீமை மாறி, அழுக்கு ஒழிந்து, மெய்யான பெருமையைப் பெற்று, இன்பத்தை அடைவார்கள். ஆகவே ஆண்டவன் கழலாகிய கொழு கொம்பில் ஏறினால் மிக உயர்ந்து படரலாம் என்பதற்கு மயில் சிறந்த சாட்சியாக நிற்கிறது. அந்த மயிலை உடையவனிடத்தில் விண்ணப்பித்துக் கொள்கிறார்.

**தூவிக் குலமயில் வாகனனே!**

தாவிப் படரக் கொழுகொம்பு இல்லாத தனிக் கொடி போல உலகத்தில் உழல்கின்ற ஒருவர், துணை இல்லாமல் வாடித் தள்ளாடிப் பதைபதைத்து, ''எம்பெருமானே, உன்னுடைய செந்தாமரைக் கழலாகிய கொழுகொம்பை நாட்டு. சூரனாகிய அசுரனை உன்னுடைய தொடர்பால் பெருமையுடைய மயில்வாகனமாகும்படி செய்த எம் பெருமானே, உன்னுடைய கமல பாதத்துடன் சேர்த்து, என்னைக் காத்து அருளவேண்டும்'' என்று வேண்டுவது போலப் பாட்டு அமைந்திருக்கிறது.



காவிக் கமலக் கழலுடன்
சேர்த்தெனைக் காத்தருளாய்;
தூவிக் குலமயில் வாகன
னே, துணை ஏதும்இன்றித்
தாவிப் படரக் கொழுகொம்
பிலாத தனிக்கொடிபோல்
பாவித் தனிமனம் தள்ளாடி
வாடிப் பதைக்கின்றதே.

(மெல்லிய இறகையும் சிறப்பையும் உடைய மயிலை வாகனமாகக் கொண்ட எம்பெருமானே, இவ்வுலகில் என் இடரை நீக்கி நலம் செய்யும் துணையாக எந்தப் பொருளும் எனக்கு இல்லாமல், தாவிப் பற்றி ஏறிப் படரத் துணையாகிய கொழுகொம்பு இல்லாமல் வாடும் தனிக்கொடியைப்போலப் பாவம் நிறைந்த என் மனம் தளர்ந்து அலைந்து வாட்டமுற்று அஞ்சிக் குலைகிறதே! நீ அடியேனை நின்னுடைய செந்நிறமான தாமரையைப் போன்ற திருவடியோடு சேர்த்துக் காத்தருளவேண்டும்.

காவிக் கமலம்-செந்தாமரை; காவி என்றது அதன் நிறமாகிய செம்மையைக் குறிக்க நின்றது. கழல்-திருவடி; ஆகுபெயர். சேர்த்தல்-இடைவிடாது பற்றிக் கொண்டிருக்கும்படி செய்தல். என்னைச் சேர்த்துக் காத்தருளாய். குலம்-மேன்மை. கொழுகொம்பு-கொடிபடர நடும் கொம்பு; கொள் கொம்பு என்றும் கூறுவார்கள். "கொம்பரிலாக்கொடி போல் அலமந்தனன் கோமளமே" என்பது திருவாசகம். பாவி என்பது மனத்துக்கு அடை; பாவியாகிய மனம்.]

நின் திருவடியைப் பற்றும் அன்பை அடியேனுக்கு அருள வேண்டும் என்பது கருத்து.

இது கந்தர் அலங்காரத்தில் 99-ஆவது பாட்டு.

# விடுதலை

எந்தச் செயலைச் செய்யத் தொடங்கினாலும் அதைச் செவ்வனே முடிக்கவேண்டும். முடிவு மனநிறைவைத் தரவேண்டும். இனிய பாட்டுக் கச்சேரி நடக்கிறது. அது இனிது முடிந்ததென்பதற்கு என்ன அடையாளம்? ஏதோ பெரிய ஆனந்த வெள்ளத்தில் அமிழ்ந்தது போன்ற நிறைவு நம் உள்ளத்தில் உண்டாகவேண்டும். சிறந்த காவியம் ஒன்று இருக்கிறது. அதன் எடுப்பும் தொடுப்பும் முடிப்பும் முக்கியமானவை. எடுப்பும் முடிப்பும் மிகவும் முக்கிய மானவை. முடிப்பு என்றும் மனத்திலிருந்து நீங்காததாக இருக்கவேண்டும்.

### எடுப்பும் முடிப்பும்

காவியங்களில் எடுப்பும் முடிப்பும் ஒன்றுபோல இருக்க வேண்டும். எந்தக் கருத்தைக் காவியம் முழுவதும் வற்புறுத்து கிறதோ, அதை ஆரம்பமே குறிப்பாகக் காட்டவேண்டும்; முடிவில் அது தெள்ளத் தெளியப் புலனாகவேண்டும். சங்கீதக் கச்சேரியில் ஸா-பா-ஸா என்று முதல் நடு முடிவு சுவரங்களைக்கொண்டு சுருதி சேர்ப்பார்கள். ஸா என்ற சுவரத்தில் தொடங்கி அந்தச் சுவரத்தில் முடிப்பார்கள்.

வேதம் ஓம் என்று தொடங்கி ஓம் என்று முடிகிறது. இப்படி இருப்பது ஓர் அழகு; கலையழகு.

கந்தர் அலங்காரத்தின் இறுதிப் பாடலாகிய நூருவது பாட்டை இப்போது பார்க்கப் போகிறோம். அதுதான் இந்த அற்புத ஞானநூலின் நிறைவு; இந்த அருமையான பக்தி இலக்கியத்தின் முடி; இந்த அருளநுபவ விருந்தின் இறுதி. அலங்காரத்தின் முதலும் முடிவும் அழகாக ஒரே சுருதியாக அமைந்திருக்கின்றன என்பதை நாம் அறிந்து மகிழ வேண்டும்.

### அருணகிரியார் கருணை

அருணகிரி நாதர் அநுபூதிமான் என்பதுதான் அவருக்கு உள்ள சிறப்புக்களில் தலையானது. மற்றவை. யாவும் அதற்குப்பின் வருவனவே. அருளநுபவம் பெற்றதோடு பிறருக்கும் அத்தகைய அநுபவம் உண்டாகவேண்டும் என்ற கருணையும் அவரிடம் நிறைந்திருக்கிறது. அதனால்தான்,

"கருணைக்கு அருணகிரி"

என்று ஒரு பழம்பாட்டுச் சொல்கிறது. மற்றவர்களிடத்தில் அவருக்கு உள்ள கருணை அளவுக்கு மிஞ்சியது. தாய் தன் குழந்தைக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் தருகிறாள். உணவு ஊட்டுகிறாள். உடை உடுத்துகிறாள். தாலாட்டி உறங்கச் செய்கிறாள். நல்ல உபதேசம் செய்கிறாள். இவை யாவும் அவளுடைய பேரன்பைக் காட்டுகின்றன. குழந்தை வளர்ந்து விடுகிறது. பள்ளிக்கூடத்துக்குப் போகும் பையனாக வளர்ந்து விட்டது. ஒரு நாள் அந்தப் பையன் வீட்டில் மைப் புட்டியைக் கொட்டிவிட்டான். அவனுடைய தந்தை கோபக்காரர். அதுதெரிந்தால் அவனுக்கு உதை கிடைக்கும். இது தெரிந்த தாய் என்ன செய்கிறாள்? அந்தக் குற்றத்தைத் தானே செய்ததாகச் சொல்கிறாள். தன் கணவன் வீட்டுக்கு வரும்போது, "அந்த மைப்புட்டியை நகர்த்திவைக்கப் போனேன்; கைதவறிக் கொட்டிவிட்டேன்" என்று சொல்கிறாள். அவள் சொல்வது பொய்தான். ஆனால் அது ஒரு நன்மையை விளைவிக்கிறது. பையனுக்குக் கடுமையான தண்டனை கிடைக்காமல் காப்பாற்றுகிறது. பையன்

அறிவாளியாக இருந்தால், தாயின் கருணையை நினைந்து உருகுவான். 'நாம் செய்த குற்றத்தைத் தான் செய்ததாகச் சொல்லுகிறாளே!' என்று வியப்பும் உருக்கமும் கொள்வான்; 'இனி இத்தகைய குற்றத்தை நாம் செய்யக்கூடாது' என்று உறுதி பூண்பான்.

அந்தத் தாயைப் போன்ற கருணையை உடையவர் அருணகிரிநாதர். நமக்கு எத்தனையோ நல்ல உபதேசங்களைச் செய்கிறார். முருகன் பெருமையை வேறு யாரும் சொல்லாத வகையில் விரிவாக, நம் உள்ளம் உருகும்படி எடுத்துச் சொல்கிறார். அவனைப் பணிந்தால் கிடைக்கும் நன்மை இது என்று பாடுகிறார். இன்ன இன்னபடி அவனை வணங்குங்கள், நல்ல காரியத்தைச் செய்யுங்கள் என்று வழி காட்டுகிறார். இப்படியெல்லாம் செய்யாதீர்கள் என்று எச்சரிக்கிறார். இவை யாவும் அவருக்கு நம்மிடம் உள்ள கருணையைப் புலப்படுத்துவனவே. இவற்றிற்கு மேலே, நாம் செய்யும் குற்றங்களைத் தாம் செய்ததாகப் பாடுகிறார்; இது அவருடைய பெருங்கருணையைக் காட்டுவது.

கந்தர் அலங்காரத்தில் மேலே சொன்னவற்றிற்கெல்லாம் உதாரணங்கள் உண்டு. திடீரென்று ஒருவர் கந்தர் அலங்காரத்தைப் பிரித்துப் பார்க்கிறார்.

> "சிந்திக்கி லேன்நின்று சேவிக்கி லேன்தண்டைச் சிற்றடியை
> வந்திக்கி லேன்ஒன்றும் வாழ்த்துகி லேன்மயில் வாகனனைச்
> சந்திக்கி லேன்பொய்யை நிந்திக்கி லேன்உண்மை சாதிக்கிலேன்
> புந்திக் கிலேசமும் காயக் கிலேசமும் போக்குதற்கே"

என்ற பாடல் தென்படுகிறது. அல்லது இதைப்போல அருணகிரியார் தம்மை இழிவாக, குற்றமுள்ளவராக, கூறிக் கொள்ளும் பாடலை அவர் பார்க்கிறார். அருணகிரியாரைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொள்ளாத அவர் என்ன நினைப்பார்? 'இந்தப் பாடல்களைப் பாடினவர் நம்மைப் போலக் குறைபாடுடையவர்போல இருக்கிறது' என்ற எண்ணம் தோன்றலாம்.

## அநுபூதி அடையாளம்

உண்மையை உணரவேண்டுமானால் அலங்காரத்தின் முதலையும் முடிவையும் பார்க்கவேண்டும். அப்போது தெள்ளத் தெளிவாக அவருடைய நிலை தெரியும். அந்த இரண்டும் இரண்டு எல்லைக் கற்களைப்போல நிற்கின்றன. இரண்டும் அருணகிரிநாதர் அநுபூதிமான் என்பதை விளக்கும் அடையாளங்களாக உள்ளன. இடையிலும் அவருடைய அநுபவத்தை விளக்கும் பாடல்கள் இருக்கின்றன. அவற்றைத் தேடிப் பார்க்கப் பொறுமை இல்லாவிட்டால் முதலையும் முடிவையும் பார்த்தால் அவர் நிலை தெளிவாகும். எப்படித் தொடங்கினாரோ அப்படியே முடித்திருப்பதைக் காணலாம்.

ஆகவே, கந்தர் அலங்காரத்தின் முதலும் முடிவும் ஒத்து அழகாக நிற்பதோடு, அருணகிரியாரின் உண்மையான நிலையை, அதாவது அவருடைய அநுபவச் சிறப்பை எடுத்துக் காட்டுவனவாகவும் உள்ளன.

முதல் பாட்டிலும் முடிவுப் பாட்டிலும் இறைவன் அருளால் தாம் பெற்ற அநுபவத்தைச் சொல்லி, "இந்த அற்புதத்தை என்பால் நிகழ்த்தினான் ஆண்டவன். அவன் அருளின் பெருமை இருந்தவாறு என்னே!" என்று வியக்கிறார். அருணகிரியார் பாடல்களில் இந்த அநுபவ அதிசயப் பெருக்கைப் பல இடங்களிலே காணலாம்.

"அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே"

என்று மாணிக்கவாசகருக்கும் இந்த அதிசய உணர்ச்சி ஏற்பட்டது. அருணகிரியார், "இப்படி நிகழ்ந்தது பெரிய ஆச்சரியம்!" என்று சொல்வதில்லை; "இப்படி நிகழ்ந்தவாறு என்னே!" என்று கூடச் சொல்வதில்லை. வியப்பில் மூழ்கியவர் தாம் சொல்ல வந்ததை முழுமையாகச் சொல்லாமல், கேட்பவர்கள் உய்த்துணரும்படி வைப்பது இயல்பு. அப்படி, "நிகழ்ந்தவா!" என்று சொல்லித் தம்

அதிசய உணர்ச்சியைக் காட்டி நிறுத்துவது அருணகிரி யாருக்கு வழக்கம். ஒருவகையில் இப்படி வரும் இடங்கள் அருணகிரியாரை இனம் கண்டு கொள்ளும் முத்திரை உள்ள பாடல்கள் என்று கூடச் சொல்லிவிடலாம்.

''தெளிய விளம்பிய வாமுகம் ஆறுடைத் தேசிகனே!'' (8)
''சும்மா இருக்கும் எல்லையுட் செல்ல எனைவிட்டவா!'' (10)
''புரையற்ற வேலவன் போதித்தவா!'' (61)

என்பன கந்தர் அலங்காரத்தின் இடையே வருவன.

''பிரமம் கெடமெய்ப் பொருள்பே சியவா'' (8)
''போகா வகைமெய்ப் பொருள்பே சியவா'! (11)
''உரிதா உபதே சம்உணர்த் தியவா'' (30)
''தாளைப் பணியத் தவம்எய் தியவா'' (22)

என்று கந்தர் அநுபூதியிலும் இவ்வாறே வியப்பைக் காட்டு கிறார்.

## அநுபவாதிசயம்

இத்தகைய அநுபவாதிசயப் பெருக்கை அலங்காரத்தின் முதற்பாட்டும் நூறுவது பாட்டும் புலப்படுத்துகின்றன.

''பேற்றைத் தவம்சற்றும் இல்லாத என்னை ப்ரபஞ்சம்என்னும்
சேற்றைக் கழிய வழிவிட்டவா!''

என்று தொடங்குவது முதற்பாட்டு.

இடுதலைச் சற்றும் கருதேனைப் போதம் இலேனை
அன்பால்
கெடுதல் இலாத் தொண்டரிற் கூட்டியவா!

என்பது இங்கே பார்க்கப்போகிற நூறுவது பாட்டு. அங்கே, ''வழிவிட்டவாறு என்ன வியப்பு!'' என்ற பொருள்படப் பாடினார். இங்கே, ''தொண்டர்களுடன் கூடும்படி செய்த வாறு என்ன ஆச்சரியம்!'' என்ற பொருளை அமைத்துப் பாடுகிறார்.

முதல் பாட்டில், ''என்னிடம் இரண்டு இயல்புகள் இல்லை; அவ்வாறு இருந்தும் நீ எனக்கு அருள் செய்தாய்'' என்று சொன்னவர் இங்கும் இரண்டு இயல்புகள் இல்லை என்றே தொடங்குகின்றார். அங்கே, ''எனக்கு முன் பிறவியிலே செய்த நன்மையினால் கிடைக்கும் பயனாகிய பேறும் இல்லை; இந்தப் பிறவியிலே முயன்று செய்த தவமும் இல்லை'' என்கிறார். 'சேர்த்து வைத்த பணமும் இல்லை; இப்போது வேலை இல்லாமையால், வருவாயும் இல்லை' என்று ஏழை ஒருவன் வருந்திக் கூறுவதுபோல இருக்கிறது அது. இங்கே, ''தானம் செய்யவும் அறியேன்; ஞானமும் பெறவில்லை'' என்று இரண்டு குறைகளைச் சொல்லிக்கொள்கிறார்.

அங்கே, ''பிரபஞ்சம் என்னும் சேற்றைக் கழிய வழி விட்டவா!'' என்றவர், இங்கே, ''அன்பால் கெடுதல் இலாத் தொண்டரிற் கூட்டியவா!'' என்கிறார். அங்கே பிரபஞ்சச் சேற்றினின்றும் விலகித் தூய்மை பெற ஆண்டவன் அருள் செய்தான் என்றார். தூயவர்களோடு கூட்டினான் என்று இங்கே சொல்கிறார். பிரபஞ்ச வாசனை கழிந்து, இந்திரியங்களின் வயப்பட்ட நிலை மாறி, இருவினை சுழலச் சரீர அபிமானம் துறந்து, ஜீவன் முக்தி பெற வேண்டும். அந்த முடிந்த நிலையாகிய விடுதலையை இந்தப் பாட்டில் சொல்கிறார். முக்தி என்பதற்கு விடுதலை என்பது பொருள். வீடு என்பதும் விடுதலை என்பதும் ஒரே பொருள் உடையன. இரண்டும் விடு என்னும் பகுதியடியாகப் பிறந்த சொற்களே.

''இம்மூன்றும் விட்டதே பேரின்ப வீடு''

என்ற ஔவையார் பாட்டில் விடுவது வீடு என்ற விளக்கம் இருக்கிறது.

செய்யவேண்டிய சாதனங்களைப் பயிலாமல் இருந்தாலும் முருகன் பெருங்கருணையினால் பிரபஞ்சச் சேற்றை நீக்கினான் என்று முதல் பாடலில் பாச நீக்கத்தைச் சொன்னவர், எந்த விதமான தகுதியும் இல்லாத எனக்கு

முருகன் பெருங்கருணையினால் ஜீவன் முக்த நிலையை அருளி னான் என்று கடைசிப் பாட்டில் சொல்லிக் கந்தர் அலங் காரத்தை நிறைவேற்றுகிறார். முதலிலும் முடிவிலும் பொதுவாக அமைந்திருப்பவை தம் தகுதியின்மையும், இறைவன் பெருங்கருணையும், அதனால் விளைந்த அநுபவமும், அதுகண்டு பெற்ற வியப்பும் என்பனவாம். இனி அலங் காரத்தை நிறைவாக்கும் இந்த நூறாவது பாடலிலே புகுந்து பார்க்கலாம்.

### மூன்று நிலை

இந்தப் பாட்டு மூன்று வேறு நிலைகளைக் காட்டுகின்றது. முன்னைய நிலை, இறைவன் அருளால் பெற்ற பயிற்சி நிலை, அதனால் விளைந்த விளைவு என்று அந்த மூன்று பகுதியையும் இந்தப் பாட்டில் பார்க்கலாம்.

**இடுதலைச் சற்றும் கருதேனைப் போதம் இலேனை**

என்பது முன்னை நிலை; இறைவன் அருள் பெறாத ஆன்மா வின் நிலை.

**அன்பால் கெடுதல் இலாத் தொண்டரில்**
**கூட்டியவா!**

என்பது இரண்டாவது நிலை. இறைவன் காட்டிய வழியைத் தெரிவிப்பது இது. முன்பு காட்டியது தரையானால் இது மேலே ஏறுவதற்குரிய படிபோன்றது. இயல்பு நிலை, சாதன நிலை என்று இவ்விரண்டையும் கூறலாம். அடுத்த நிலை,

**பிறவி அற இச்சிறை விடுதலைப்பட்டது;**
**விட்டது பாச வினை விலங்கே**

என்பது. இது பயன் அல்லது அநுபவம்; இது சாத்திய நிலை. படிகளில் ஏறியவன் மேல்தளத்தை அடைந்து விட்டது போன்றது இது.

இந்த மூன்றையும் அன்றி, தமக்கு அருள் செய்தவனை அடையாளம் காட்டும் பகுதியும் பாட்டில் இருக்கிறது.

கிரெளஞ்ச வெற்பை அடுதலைச் சாதித்த
வேலோன்

என்பது அது; முருகனைச் சொல்லும் பகுதி. 'வேலோன் தொண்டரிற் கூட்டினன். அதனால் விடுதலை கிடைத்தது; விலங்கு தறியுண்டது' என்று முழுப் பாட்டும் தொடர் புடைய பொருளோடு நிற்கிறது.

இடுதலைச் சற்றும் கருதேனைப், போதம் இலேனை,
அன்பால்
கெடுதல் இலாத்தொண்ட ரில்கூட் டியவா!
கிரெளஞ்ச வெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன்; பிறவி
அறஇச்சிறை
விடுதலைப் பட்டது; விட்டது பாச
வினைவிலங்கே.

## தொண்டரொடு சேர்தல்

'முருகன் எனக்குப் பிறவியினின்றும் விடுதலை உண்டாக வும், வினைநீக்கம் ஏற்படவும் வழிகாட்டினன்' என்று சொல்லும் இந்தப் பாட்டில் தொண்டர்களோடு சேர்த்ததே அந்த வழி என்று சொல்கிறார். 'நானாகத் தொண்டரோடு கூடும் இயல்பு இல்லாதவன். முருகன் என்னை அவர்களோடு கூடச்செய்தான். அதன் பயனாக உடம்பினின்றும் விடுதலையும் பாச நீக்கமும் உண்டாயின' என்கிறார்.

தொண்டரோடு கூடுவதற்குச் சில தகுதிகள் வேண்டும் அந்தத் தகுதிகள் இருந்தால் தொண்டரோடு உறவாடும் இயல்பு தானே வந்து அமையும். அந்தத் தகுதி இன்மை யால் அந்த இயல்பும் இல்லையாயிற்று. தொண்டர் கூட்டத் தைப் பற்றிக் கொள்ளாமைக்குக் காரணம் வேறு பற்றுக்கள்.

## செல்வத்தைப் பற்றுதல்

நாம் இப்போது மிகவும் அதிகமாகப் பற்றிக்கொண்டிருக்கும் பொருள் செல்வம். எல்லாப் பொருள்களையும் பெறுவதற்குக் கருவியாக இருப்பது பணம். அதை எல்லாப் பொருள்களுக்கும் பிரதிநிதி என்று சொல்லலாம். வெவ்வேறு பண்டங்களிடத்தில் ஆசையுடைய மனிதன் வேண்டும்போது அவற்றை வாங்கிக் கொள்வதற்கு ஏற்ற கருவியாகிய பணத்தைச் சேகரித்து வைத்துக்கொள்கிருன். மற்றப் பண்டங்களில் வைத்தற்குரிய பற்றையெல்லாம் ஒரு சேரப் பணத்தின்மேல் வைக்கிருன்.

நாம் பணத்தை இறுகப் பற்றிக் கொண்டிருக்கும் பற்றுப் போகவேண்டும். காமினீ காஞ்சனம் என்னும் இரண்டிலும் உள்ள ஆசை போகவேண்டும் என்று இராம கிருஷ்ண பரமஹம்ஸர் அடிக்கடி சொல்வார். பணத்தில் உள்ள பெரும் பற்றை உலோபம் என்பர்; அதைப் பற்றுள்ளம் என்றும் சொல்வதுண்டு. ஒரு விதத்தில் பெண்ணின் மீதுள்ள பற்றைவிடக் கொடியது செல்வத்தின் பால் உள்ள பற்று. பெண்ணாசை பருவம் வாராதவர்களுக்கு இல்லை; பருவம் முதிர்ந்தவர்களுக்கும் வலிமையுடன் இருப்பதில்லை. பணப் பற்ருே எந்தப் பருவத்தினரிடமும் இருக்கிறது.

## தியாகம்

பொருளிடம் பற்று ஒருவனுக்கு இல்லை என்பதை எப்படித் தெரிந்து கொள்வது? அதை அவன் தியாகம் செய்யத் தயங்கமாட்டான். கண்ணைக் கொடுத்தான் கண்ணப்பன். அவனுக்குச் சரீரத்தில் உள்ள பற்று அற்று விட்டது. பிள்ளையைக் கொடுத்தார் சிறுத்தொண்டர். மனைவியைக் கொடுத்தார் இயற்பகையார். அவர்களுக்கு மனைவி மக்கள் என்ற பற்று ஒழிந்தது. அவர்கள் செய்த தியாகத்தால் இந்த இயல்பு புலனாகிறது.

பற்று இல்லாதவர்கள் தியாகம் செய்வார்கள் என்பது உண்மை. நாமோ பற்றிலே ஆழ்ந்திருக்கிறோம். நாம் எப்படிப் பற்றை விடுவது? பற்று அற்றவன் செய்யும் காரியத்தை நாம் சிறிது சிறிதாகச் செய்து பழகவேண்டும். தியாக சீலத்தை வளர்க்கவேண்டும்.

### பற்றுப் போகும் வழி

ஒருத்திக்கு அவள் கணவனிடம் மிகுந்த பற்று. அவன் இறந்துபோனால் தான் உயிர் வாழ முடியாது என்று நினைக்கிறாள். துரதிருஷ்டவசமாக அவன் இறந்துவிடுகிறான். அன்று அவள் படும் துயரத்திற்கு எல்லையே இல்லை என்று தோன்றுகிறது. அடிக்கடி மூர்ச்சைபோட்டு விழுந்து விடுகிறாள். அன்று முழுவதும் அவள் உண்ணவே இல்லை. மறு நாள் அவளுடைய தாய் அவளை அணுகி ஆறுதல் கூறுகிறாள். ''அவர் இறந்துவிட்டார். நீயும் போய்விட்டால் குழந்தைகளுக்கு யார் இருக்கிறார்கள்? கொஞ்சம் சாப்பிடம்மா'' என்று நயந்து பேசி வற்புறுத்தி உணவு அளிக்கிறாள். வேண்டா வெறுப்பாக அதை அவள் உண்ணுகிறாள். ஒவ்வொரு நாளாகக் காலம் உருண்டு ஓடுகிறது. அவளுடைய துயரம் குறைந்து கொண்டே வருகிறது. ஒருவாறு ஆறுதல் பெறுகிறாள். அவளே சமாதானம் செய்துகொண்டு வேலைகளைக் கவனிக்கிறாள் குழந்தைகளை அரவணைக்கிறாள்.

இப்போது, கணவனிடத்தில் அவளுக்கு அன்பு உள்ளத்தில் இருக்கலாம். ஆனால் பற்று ஒழிந்துவிட்டது. காலன் அவள் பற்றிக்கொண்டிருந்த பொருளைக் கொண்டு போய்விட்டான்.

அவ்வாறே நம் மனத்திலே இறுகப் பற்றிக்கொண்டிருக்கிற பொருளைக் கொண்டுபோக ஒரு யமன் வந்தால் நமக்கும் பற்றுப் போகலாம். யமன் வராவிட்டாலும் நாமாக வருவித்துக் கொள்ளலாமே. கையிலுள்ள பொருளை நம்மிடமிருந்து போகே ஒரு தந்திரம் செய்யவேண்டும். அது

ஒன்றும் பெரிய காரியம் அன்று. யாருக்காவது கொடுக்கலாம். பணம் இல்லாமல் துன்புறுகிறவர்களுக்குக் கொடுக்கலாம். கையில் உள்ள பொருளைக் கொடுக்கும் போது முதலில் வருத்தந்தான் உண்டாகும். ஆனால் சிறிது துணிவோடு பழக்கம் செய்துகொண்டு விட்டால் நாளடைவில் பணத்திடம் உள்ள பற்றுத் தேய்ந்துவிடும்.

ஆகவே, செல்வத்தைப் பிறருக்கு ஈவதனால் மெல்ல மெல்ல அதன்பால் நமக்கு உள்ள பற்றுக் குறைந்து கொண்டே வரும் என்பதை ஒருவாறு தெரிந்து கொண்டோம்.

ஈகை

இத்தகைய ஈகையினால் இரு வகை நலங்கள் உண்டாகின்றன. பணக்காரனிடம் உள்ள செல்வம் சமுதாயத்தில் உள்ள ஏழை மக்களிடம் பரவலாகச் சென்று நல்ல பயனைத் தருகிறது. இது ஒரு நன்மை; சமுதாயத்துக்கு உண்டாகும் நலம். ஈபவனுக்கு மெல்ல மெல்லப் பற்றுக் குறைந்து வருகிறது. அது அவனுக்கு நலம், இயல்பாகப் பற்றை ஒழிக்க இயலாதவர்களுக்கு ஈகை என்பது அதற்குரிய பயிற்சிபோல உதவும்.

நன்றாகத் தூங்குவது நல்லது. குழந்தைகளுக்கு இயற்கையாகவே தூக்கம் வந்துவிடுகிறது; எந்த இட மானாலும் தூங்கிப்போகின்றன; படுக்கையோ, தலையணையோ எதையும் வேண்டுவது இல்லை. நாம் அப்படித் தூங்க முடிவதில்லை. இயற்கையாகத் தூக்கம் வருகிற நிலையிலிருந்து நெடுந்தூரம் விலகி வந்து விட்டோம். ஆனாலும் நமக்குத் தூக்கம் இன்றியமையாதது. தூக்கம் வந்தால்தான் உடம்பிலும் உள்ளத்திலும் உள்ள சோர்வு போகும். அதற்காக நாம் செயற்கைச் சாதனங்களை மேற்கொள்கிறோம். இயற்கையாக அடைய முடியாததைச் செயற்கையாக அடைய முயல்கிறோம். மெத்தென்ற

படுக்கை, தலையணை, திண்டு, மின்விசிறி—இப்படிப் பல வற்றை வைத்துக்கொண்டு நித்திரா தேவிக்கு வரவேற்புக் கூறுகிறோம்.

இவ்வண்ணமே பற்று அகற்றுவதிலும் செயற்கை முறை உண்டு. இயற்கையாக நம்மிடமிருந்து பற்றுப் போக வில்லை. செயற்கையாக அதைப் போக்கவேண்டும். பற்று அற்றவன் செய்யும் காரியத்தை நாம் செய்து பழக வேண்டும். பற்று அற்றவன் தனக்கென்று எதையும் வைத்துக்கொள்ளாமல் பிறருக்கு அளித்துவிடுகிறான். நாமும் அப்படியே கொடுத்துக் கொடுத்து மெல்ல மெல்லப் பற்றைக் குறைத்துக்கொண்டு வரவேண்டும்.

மனைவியை இழந்துவிட்டு ஒருவன் இருக்கிறான். மனைவியைத் துறந்துவிட்டு ஒருவன் வாழ்கிறான். இயற்கை யாக ஞானம் படைத்தவன் மனைவி இல்லாமல் வாழத் தெரிந்து கொண்டிருக்கிறான். மனைவியை இழந்தவனோ முதலில் சில நாள் துன்பத்திற்கு உள்ளானாலும் போகப் போக அந்த நிலை பழகிப்போய், மனைவி இல்லாமலே வாழத் தெரிந்துகொண்டு விடுகிறான். ஒருவனுக்கு இயல்பாகவே பற்று அற்றுப்போகிறது. மற்றொருவனுக்கு அவசியத்தினால் அற்றுப் போகிறது. இரண்டாவதாகச் சொன்னதைத் தான் பற்று அறுவதற்குரிய பயிற்சி அல்லது சாதனம் என்று கொள்ள வேண்டும்.

'ஆண்டவனே, தொண்டருடைய கூட்டத்தில் நான் சேர வேண்டுமானால் அவர்களைப் போல நானும் இயற்கை யாகப் பணத்தில் பற்று இல்லாதவனாக இருக்க வேண்டும். நான் அத்தகையவன் அல்லன். நான் பற்றிலே அமிழ்ந்த வன். ஆதலால் பற்று அறுவதற்குரிய பயிற்சியைச் செய்து பற்று நீங்கி நிற்கவேண்டும். அப்படிச் செய்தால் தொண்ட ரோடு கூடலாம். அந்தப் பயிற்சியும் என்னிடம் இல்லை. அதாவது, நான் ஈகை இயல்பு உடையவன் அல்லன்' என்று எண்ணிய அருணகிரியார் அந்த எண்ணங்களையெல்லாம் சுருக்கி,

இடுதலைச் சற்றும் கருதேனே

என்கிறார். 'பிறருக்குக் கொடுக்க வேண்டும் என்பதை எள்ளளவேனும் கருதாதவன் நான்' என்று கூறுகிறார். முதல் பாட்டிலும் இந்தச் சற்றும் என்ற சொல் வருகிறது.

"பேற்றைத் தவம் சற்றும் இல்லாத என்னை"

என்று இருக்கிறது அல்லவா?

இடுதல் என்பது பெரும்பாலும் சோறு இடுவதையே குறிக்கும்.

"இருபிடி சோறுகொண்டு இட்டு உண்டு இரும்"

என்று ஒரு பாட்டில் வந்ததைப் பார்த்தோம். ஆனால் இங்கே இடுதல் என்பது எல்லாப் பொருள்களையும் கொடுக்கும் செயலைக் குறிக்க வந்தது. ஈதல் என்ற சொல்லின் பொருளிலேதான் இங்கே அச்சொல் அமைந்திருக்கிறது.

இங்கே, 'இடுதலைச் சற்றும் செய்யேனே' என்று அருணகிரியார் சொல்லவில்லை; 'சற்றும் கருதேனே' என்கிறார். கொடுக்க வேண்டும் என்ற நினைப்புக்கூட இல்லாதவன் என்பதில் பற்றுள்ளத்தின் கடுமை நன்றாகப் புலனாகிறது. அன்றியும் ஈகைக்கு வித்து மனத்திலே தோன்றுகிற எண்ணந்தான். அது தோன்றி வளர்ந்தால் பிறகு உறுதி பெற்றுச் செயலாக விளையும்; அதனால் ஔவைப் பிராட்டி,

"அறம் செய விரும்பு"

என்று மனத்தின் செயலாகிய விருப்பத்தைச் சொன்னாள். 'எனக்கு அந்த முதல் படிகூடத் தட்டுப்படவில்லையே!' என்று அங்கலாய்க்கிறார் அருணகிரியார்.

## ஈகையின் வகை

'ஈகை பல வகைப்படும். அறங்கள் முப்பத்திரண்டு என்று ஒரு கணக்கு உண்டு. காஞ்சீபுரத்தில் காமாட்சியம்மை முப்பத்திரண்டு அறங்களையும் செய்தாளாம். பசு

மாட்டுக்குப் புல் வாங்கிப் போடுவது ஓர் அறம். புல் விலைக்கு வாங்கிப் போட முடியவில்லை என்ருல், புல் உள்ள இடத்திற்கு மாட்டை ஓட்டிக்கொண்டு சென்று மேய்த்து வந்தாலும் புண்ணியம் உண்டு. பசுமாடு சொரிந்து கொடுப்பவர்களிடத்தில் வந்து நிற்கும்; தன் அலைதாடியைக் காட்டும். அதைச் சொரிந்து கொடுப்பது ஒரு தர்மம். பழங்காலத்தில் பசுமாடுகள் தினவு தீர உராய்ந்து கொள்வதற்குக் கல்தூண் ஒன்று நடுவது உண்டு. அதற்கு ஆவுறிஞ்சு தறி என்று பெயர். அதுவும் ஒரு தர்மம். எல்லோரும் செய்வதற்கு ஏற்றபடி அறங்களிற் பல வகை உண்டு.

''யாவர்க்கும் ஆம்இறை வற்கொரு பச்சிலை;
யாவர்க்கும் ஆம்பசு வுக்கொரு வாயுறை;
யாவர்க்கும் ஆம்உண்ணும் போதொரு கைப்பிடி;
யாவர்க்கும் ஆம்பிறர்க் கின்னுரை தானே.''

இது திருமூலர் திருமந்திரம். எவ்வளவு எளிதாகச் சொல்லியிருக்கிருர்! மனிதப் பிறவி எடுத்தவர் யாவராயினும் இந்தத் தர்மங்களைச் செய்ய முடியுமாம். நல்ல வார்த்தை சொல்வதுகூட ஒரு தர்மமாம்.

'இப்படி எத்தனையோ அறங்கள் இருக்கின்றனவே; அவற்றில் ஒன்றும் நான் செய்யவில்லை. என் பற்றுக் கெடுவதற்கு ஈகையே வழியென்று சிறிதளவாவது நான் சிந்திக்கவே இல்லையே!' என்கிருர் அருணகிரியார்.

**இடுதலைச் சற்றும் கருதேனை.**

## போதம் இன்மை

இப்படி ஒரு குற்றத்தைச் சுமத்திக்கொண்டார். அடுத்தபடி மற்ருென்றைச் சுமத்திக்கொள்கிருர்.

**போதம் இலேனை.**

போதம்-அறிவு. அதுவே ஞானம். நாம் யார், நமக்குப் பெரிய துன்பமாக உள்ள பிறப்பு எப்படி வந்தது, இந்தத் துன்பத்தைப் போக்குவது எப்படி, இறைவன் இயல்பை உணர்ந்து அவன் அருளைப் பெறுவது எவ்வாறு என்று இவை போன்ற கேள்விகளை எழுப்பி ஆராய்ந்து உண்மை காண வேண்டும். இந்த ஆராய்ச்சிக்கு உறுதுணை யாக இருப்பது போதம். குருநாதருடைய கிருபையால் ஞானம் வரவேண்டும். பற்று ஒழித்தவனுக்கு ஞானம் விளையும். ஞானம் உண்டாகிவிட்டால் அவனுக்கு இறை யருள் கிடைக்கும். யாருடைய உதவியும் அவனுக்கு வேண்டியதில்லை.

பொருளின்மேல் பற்று உள்ளவனுக்கு ஈகை வாராது. அறியாமை உள்ளவனுக்கு ஞானம் உண்டாகாது. பற்றும் அஞ்ஞானமும் உடையவர்கள் நாம். இவை போனால்தான் அருளைப் பெறலாம். 'இந்த இரண்டு குற்றமும் நீங்காமல், ஈகையை மேற்கொள்ளாமல், போதம் உறாமல் இருந்தேன் அடியேன். அத்தகையவனுக்கு நீ நல்ல வழி காட்டினாய்!' என்று சொல்கிறார் அருணகிரியார்.

இடுதலைச் சற்றும் கருதேனைப் போதம்
இலேனை அன்பால்
கெடுதல் இலாத் தொண்டரிற் கூட்டியவா!

## முருகன் செய்த தந்திரம்

நீந்தத் தெரியாதவர்களுக்கு நீச்சுக் கற்றுக்கொடுக்க வேண்டுமானால் தரையில் இருந்தபடியே கற்றுக்கொடுக்க முடியாது. ஆழம் இல்லாத இடத்திலே கொண்டுபோய்த் தள்ளிவிட வேண்டும். அங்கே கொஞ்சம் காலையும் கையை யும் அடித்துக்கொள்ளப் பழகினால் நாளடைவில் நீச்சம் தானே வந்துவிடும். நீந்தத் தெரிந்த பிறகுதான் தண்ணீரில் இறங்க வேண்டும் என்று இருப்பவனுக்கு ஒரு காலும் நீச்சம் வராது.

'முருகன் குறைபாடுடைய எளியேன் அருள்பெற ஒரு தந்திரத்தைச் செய்தான்' என்கிறார் அருணகிரியார். 'நான் தர்மம் செய்யவில்லை. ஞானோபதேசமும் பெறவில்லை. நல்ல குருநாதனைத் தரிசித்து ஞானம் பெறலாமென்றால் அதற்குத் தகுதி வேண்டும். அது இல்லாமையால் இந்தப் பிறவியில் ஒரு குருவை அடைவோம் என்ற நம்பிக்கையே இல்லை. இந்தப் பிறவி என்ன? இன்னும் பல பிறவிகள் எடுத்தாலும் அந்தப் பேறு கிட்டும் என்று தோன்றவில்லை. இடுதலும் ஞானமும் இல்லாத வெறும் ஆளாக இருந்தேன். அத்தகைய என்னையும் ஈடேற வைத்தான் முருகன். அது பெரிய ஆச்சரியம் அல்லவா?'

அவன் என்ன செய்தான்? 'முருகனுடைய திருவருளை நாடி வந்து கொண்டிருந்தது ஒரு கூட்டம்; பற்று அற்றவர் களாய், ஞானச் செல்வர்களாய், இறைவனுடைய திருவடியை அன்றி வேறு அறியாதவர்களாய், அவனை நினைந்து நினைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து உருகுபவர்களாய் விளங்குபவர்கள். அந்தக் கூட்டத்தில் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டான். கங்கையிலே போய் விழுகிற சாக்கடை யைப்போல நான் அவர்களோடு கலந்துவிட்டேன், பாலில் கலந்த தண்ணீரைப் போல அவர்களோடு வேறுபாடின்றி இணைந்துவிட்டேன்.

'என்னுடைய செயலின்படி நான் ஒழுகினால் தொண்டர் கூட்டத்துக்கும் எனக்கும் நெடுந்தூரம் இருக்கும். இனம் இனத்தோடே சேரும் என்பார்கள். இடுவதை அறியாத லோபிகளும் ஞானத்தை அறியாத அஞ்ஞானிகளுமே என்னு டைய கூட்டாளிகளாக இருந்தார்கள். என் இயல்புக்கு ஒத்த கூட்டமாக அவர்கள் கூட்டம் இருந்தது. அப்படி இருந்த என்னைத் தொண்டர் கூட்டத்தில் சேர்த்துவிட்டான் ஆண்டவன்.

'அதன் பின் அவர்கள் என்னைத் தள்ளிச் சென்றார்கள். முன்னேறாமல் நின்றால் கூட்டம் என்னை உந்தியது. நான் எவ்வளவு முயன்றாலும் பின்தங்க முடியாதுபோல் இருந்தது.

வேகமான நீரோட்டத்தில் விழுந்துவிட்டால் அதன் போக்கிலே இழுத்துச் செல்லப்படுவதுதானே இயல்பு? அப்படி ஆகிவிட்டேன் நான்.

## ஆச்சரியம்

'இதில் ஆச்சரியம் என்னவென்றால், முன்பெல்லாம் முன்னேறுவதென்பது இன்னது என்பதே தெரியாமல் இருந்த யான், பொல்லா இனத்தினின்றும் பிரியவேண்டும் என்ற எண்ணமே அறியாத யான், இப்போது என்னையே அறியாமல் முன்னேறிக் கொண்டிருக்கிறேன். என் முயற்சி அன்று இது. நான் எந்தக் கூட்டத்தின் நடுவில் இருக்கிறேனோ அந்தக் கூட்டம் என்னைத் தள்ளிக் கொண்டே செல்கிறது; என்னை முன்னேற்றிக்கொண்டே போகிறது.'

## வலியதும் எளியதும்

இரண்டு பொருள்கள் சேர்ந்தால் வலிய பொருள் எளிய பொருளைத் தன் வசம் ஆக்கிவிடும். எண்ணிக்கை எப்படியானாலும் உரத்தைப் பொறுத்து இந்த மாற்றம் நிகழும். ஒரு கலம் பாலில் சிறிதளவு மோர் கலந்தாலும் பால் முழுவதையும் திரியச் செய்துவிடும். பாலைவிட மோர் உரமுடையது. ஆனால் பாலில் நீர் கலந்தால் பாலாகவே நிற்கிறது. மனவலியுடையவர்கள் பெருங்கூட்டத்தைச் சேர்ந்தாலும் கூட்டம் முழுவதையும் தம் வயமாக்கி விடுவார்கள். நாம் மனத்திண்மை இல்லாதவர்களாதலின் சேர்ந்த இனத்திற்கு ஏற்ப மாறிவிடுகிறோம்.

தொண்டர் கூட்டத்திற் சேர்ந்தால் அவர் போக்கை நாம் மாற்றமுடியாது. சாக்கடை கங்கையை அழுக்காக்க முடியுமானால், ஆனை கடலைக் கலக்க முடியுமானால், நாம் தொண்டர்களைக் குழப்பலாம்; மாற்றலாம். அதற்கு நம்மிடம் உரம் இல்லை. ஆகவே தொண்டர் கூட்டத்திலே சேர்ந்தவுடன் நமமை அறியாமலே நம்மிடம் ஒரு மாற்றம் நிகழ்கிறது. நாம் பழைய இயல்பினின்றும் மாறித் தொண்டர்களின் நல்ல பண்புகளை மேற்கொள்கிறோம்.

இறைவன் திருநாமத்தைச் சொல்லும் பழக்கம் நமக்கு இல்லாவிட்டாலும் தொண்டர்கள், ''அரோகரா'' என்று முழங்கும்போது நாமும் முழங்குகிறோம். அவர்கள் அசைந்து ஆடும்போது நாமும் ஆடுகிறோம். அசையாமல் மௌனமாக இருக்கும்போது நாமும் அப்படியே இருக்கிறோம்.

'முன்பு நாம் இருந்த நிலைக்கும் இப்போது உள்ள நிலைக்கும், மலைக்கும் மடுவுக்கும் இடையே உள்ளது போன்ற வேறுபாடு இருக்கிறது. இரண்டையும் ஒப்பிட்டுப் பார்க்கும் பொது, ''நாமா இப்படி ஆனோம்!''என்ற வியப்பு உண்டாகிறது. நாம் ஆகிறதாவது? தொண்டர் கூட்டம் நம்மை அப்படி ஆக்கிவிட்டது. அந்தக் கூட்டத்தில் சேர நமக்குத் தகுதி இல்லாவிட்டாலும், முருகன் திருவருள் செய்தான்; தொண்டரோடு கூட்டுவித்தான். அப்படி அவன் செய்தது தான ஆச்சரியம்.'—இத்தகைய எண்ணங்கள் உள்ளத்தே பொங்கி வந்ததனால் அருணகிரியார்,

> அன்பால் கெடுதல் இலாத் தொண்டரிற்
> கூட்டியவா!

என்று வியப்படைகிறார்.

### தொண்டர்களின் இயல்பு

தொண்டர்களைச் சுட்டும்போது, 'அன்பால் கெடுதல் இலாத் தொண்டர்' என்று சொல்கிறார். அவர்களுக்கு எந்த விதமான கேடும் இல்லை. அவர்களிடம் உள்ள அன்பே அதற்குக் காரணம்.

> ''அஞ்சுவது யாதொன்றும் இல்லை
> அஞ்ச வருவதும் இல்லை''

என்று பெருமிதம் கொள்பவர்கள் அவர்கள். தனு கரண புவன போகங்களை இறைவன் நமக்கு வழங்கியிருக்கிறான். அன்பு என்னும் பண்பு இருந்தால் இவ்வளவும் நமக்கு நலம்

தரும். அது இல்லையானால் இவ்வளவும் நமக்கு மேலும் மேலும் ஆசையை உண்டாக்கிக் கேடு அடையச் செய்யும்.

> "அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
> வற்றல் மரம்தளிர்த் தற்று"

என்பார் திருவள்ளுவர். வாழ்க்கையில் பசுமை வேண்டுமானால் அன்பு வேண்டும். அன்பிலே சிறந்தது இறைவன்பால் கொண்ட அன்பு. அதுவே வாழ்க்கையின் மலர். அதன்பின் இறையருளநுபவமாகிய கனியைப் பெற வேண்டும். உயிர் வாழ்க்கை வீணாகாமல் இருக்கவேண்டுமானால் அன்பு பெருகவேண்டும்.

> "அன்பைப் பெருக்கிஎன் ஆருயிரைக் காக்கவந்த
> இன்பப் பெருக்கே இறையே பராபரமே"

என்று தாயுமானவர் கூறினார். ஆருயிரைக் காக்கும் ஆற்றல் அன்புக்குத்தான் உண்டு. எல்லா வகையான கேடுகளும் அன்பு இன்மையால் உண்டாகின்றன. அன்பு பெருகினால் கெடுதல் இன்றி ஒழியும். ஆதலின் தொண்டர்களை,

> அன்பால் கெடுதல் இலாத் தொண்டர்

என்று அருணகிரி முனிவர் சொன்னார்.

தொண்டர்கள் அன்பை வளர்த்துக் கேடுகளினின்றும் நீங்கினவர்கள். நாமோ அன்புக்கு மாறான பற்றையும் லோபத்தையும் வளர்த்து அஞ்ஞானிகளாக இருக்கிறோம். இரண்டு வகையினருக்கும் எத்தனையோ காத தூரம். இரு வகையினரும் நேர் எதிர் திக்கை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறோம். அவர்கள் வடக்கை நோக்கிப் போகிறார்கள். நாம் தெற்கை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறோம், நமக்கும் அவருக்கும் இடையில் உள்ள தூரம் வரவர அதிகமாகிறதேயன்றிக் குறையவில்லை.

அப்படி உள்ளவரை முருகன் தொண்டரோடு கூட்டினான். அன்பை வளரச் செய்தான். பற்றுள்ளமும் அறியா

மையும் மெல்ல மெல்லப் போகச் செய்தான். இவ்வாறு செய்தவன் எத்தகையவன்?

### கிரௌஞ்ச சங்காரம்

கிரௌஞ்ச வெற்பை அடுதலைச் சாதித்த வேலோன்.

ஆண்டவன் தன் திருக்கரத்தில் வேலை வைத்திருக்கிறான். அது ஞானசக்தி. ஞானம் அஞ்ஞானத்தைப் போக்கி விடும். மலை உருவம் கொண்ட அசுரனை அந்த வேல் அழித்தது. கிரௌஞ்சம் என்பது அன்றிற் பறவைக்குப் பெயர். ஆணும் பெண்ணும் இணைபிரியாமல் வாழ்வது அன்றிலின் இயல்பு அன்பின் உருவம் அது என்றே சொல்லி விடலாம். அத்தகைய பறவையின் உருவத்தைக் கொண்டமையால் கிரௌஞ்ச கிரி என்று பெயர் வந்தது. ''குருகு பெயர்க் குன்றம்'' என்று தமிழில் பாடியிருக்கிறார்கள். உருவம் அன்புக்கு எடுத்துக் காட்டாகிய அன்றிலைப்போல இருந்தாலும் உள்ளம் கல் போன்றது; இரக்கம் இல்லாதது; மலைதானே? தாமரையைப் போலக் கல்லிலே வடித்து வண்ணம் தீட்டினால் அது கண்ணுக்குத் தாமரையாகத் தோற்றம் தரலாம். ஆனால் தொட்டுப் பார்த்தால் மென்மையாக இருக்குமா? பாறையைத் தொட்டால் எப்படி வன்மையாக இருக்குமோ அதே வன்மையைத்தான் அதிலும் உணரலாம். அன்றில் உருவம் கொண்ட அசுரன் கல்லாக, மலையாக அன்பு இல்லாமல் இருந்தான். அன்றிலைப் போலவே பறக்கும் ஆற்றல் அவனுக்கு இருந்தது. ஆனால் அந்த ஆற்றலால் அவன் செய்த கொடுமை மிகுதியாயிற்று. பறந்து சென்று திடீரென்று எங்கேனும் இறங்கி அங்குள்ள மக்களையெல்லாம் அழுத்தி அழித்து விடுவான். பசுத்தோல் போர்த்த புலியைப் போலக் கொண்ட வேடத்துக்கு மாறான கொடுமைகளைப் புரிந்தான். அவனை முருகன் வேல் எறிந்து கொன்றான். கொடுமையையும் அன்பின்மையையும் வேல் அழித்தது.

'பொல்லாதவர்களை அழிப்பதற்கென்றே கையில் வேலை ஏந்தி நிற்கிறவன் முருகன். நான் பொல்லாதவனாக இருந்தும் அதைப் பொருட்படுத்தாமல் என்னை நல்ல வழியில் சேர்த்துவிட்டான். இதுவும் ஓர் ஆச்சரியந்தான்.

'என்னை நானே திருத்திக்கொண்டிருக்கலாம். அது எளிய காரியம் அன்று என்று எண்ணி, எனக்கு எந்தப் பொறுப்பும் இல்லாத வகையில் எனக்கு நன்மை வரும்படி அருளினான். என்னைத் தொண்டர் கூட்டத்திற் சேர்த்து விட்ட பிறகு என் முன்னேற்றத்தைப்பற்றி நான் கவலைப்பட வேண்டிய அவசியம் இருக்கவில்லை. ஒருவர் இருவரானால் அவர்களை விட்டு விலகிப் போவதற்கு வாய்ப்பு இருக்கிறது. பெருங்கூட்டத்துக்கு நடுவே இழுத்துப் பொருத்திவிட்டமையால், எப்படி விலகிச் செல்ல முடியும்?'

### சத்சங்கம்

அடியார் கூட்டுறவு எளிதிலே நம்மை உய்விக்கும்.

"சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர்குழாம்
சாரில் கதியன்றி வேறிலை காண்"

என்று முன்பும் இந்தச் சத்சங்கத்தைப்பற்றி அருணகிரியார் சொல்லியிருக்கிறார். அடியார் நடுவே இருக்கும் பேறு கிடைத்துவிட்டால் பக்குவ வகைகள் யாவும் ஒவ்வொன்றாக நம்மை வந்து அடையும்.

"உடையாள் உன்றன் நடுஇருக்கும்;
உடையாள் நடுவுள் நீஇருத்தி;
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானால், அடியேன்உன்
அடியார் நடுவுள் இருக்கும்அரு
ளைப்புரி யாய்;பொன் னம்பலத்தெம்
முடியா முதலே, என்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே"

என்பது திருவாசகம். தாயுமானவரோ,

''அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே.''

என்று வேண்டுகிறார்.

'இந்த அரிய சேர்க்கையை முருகன் செய்வித்தான். நானே முயலாமல், அவனே என்னைக் காப்பாற்ற இதுதான் வழியென்று திருவுள்ளங்கொண்டு சேர்ப்பித்தான். அதன் பயன் என்ன தெரியுமா?' தொண்டர் கூட்டத்தினால் விளைந்த பயனை மேலே சொல்கிறார்.

## சிறையினின்றும் விடுதலை

**பிறவிஅற, இச்சிறை விடுதலைப் பட்டது;**
**விட்டது பாச வினைவிலங்கே.**

சிறையில் ஒருவன் அடைபட்டிருக்கிறான். அவன் கால்களில் தளை பூட்டியிருக்கிறார்கள். எப்போதுமே ஒரே சிறையில் அவனை வைத்திருப்பதில்லை. ஆறுமாதம், ஒரு வருஷம் இரண்டு வருஷம் என்று வெவ்வேறு சிறைக்கு மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். இடம் மாறினாலும் சிறை வாழ்க்கை மாறுவதில்லை. சிறைவாசத் தண்டனைக் காலத்தில் காலிலும் கையிலும் விலங்குகளுடன் பல சிறைகளை அவன் பார்த்து விட்டான்.

அவனுக்கு விடுதலை கிடைக்கிறது. முதலில் அவனுடைய தளைகளை அகற்றி விடுகிறார்கள். பிறகு சிறையினின்றும் வெளியே அனுப்பிவிடுகிறார்கள். இனிமேல் வேறு எந்தச் சிறைக்கூடத்துக்கும் போகவேண்டியதில்லை.

அவனோடு பழகியவன் ஒருவன் அவனைச் சந்திக்கிறான். அவன் சிறையில் வாடியதை அறிந்தவன் அவன். ''என்ன அப்பா, சமாசாரம்?'' என்று வியப்புடன் சிறையில் இருந்தவனை அவன் கேட்கிறான். அவன், ''எனக்கு விடுதலை கிடைத்துவிட்டது'' என்று சொல்கிறான்.

''சென்னைச் சிறையில் இருந்தாயே!'' என்று பழகியவன் கேட்கிறான்.

''அதை விட்டு வெளியே வந்துவிட்டேன்'' என்கிறான்.

''பாவம்! உன் கையில் விலங்கு போட்டிருந்தார்களே!'' என்று வெளியில் வாழ்பவன் கேட்கிறான்.

''ஆம்; விலங்குகளை எடுத்துவிட்டார்கள்'' என்று மகிழ்ச்சியுடன் சொல்கிறான்.

விலங்கை எடுத்ததும் சிறையினின்றும் வெளி விட்டதும் விடுதலைக்குரிய செயல்கள். ''விலங்கைத் தறித்தார்கள்; இந்தச் சிறைக்கு வெளியே கொண்டு வந்தார்கள். 'இனி இந்த விடுதலை உனக்கு நிரந்தரமானது: வேறு சிறைக்குப் போகவேண்டாம்'' என்று சொல்லி விட்டார்கள்'' என்று சொன்னால் நிகழ்ச்சிகள் நடந்த முறையில் சொல்வதாக இருக்கும். அவனோ நிரந்தர விடுதலையை அடைந்த மகிழ்ச்சியில் அதையே முதலில் சொல்கிறான்.

## சொல்லும் முறை

ஒருவனுக்குப் பல இடங்களில் கடன் இருந்தது. சில்லறையாகவும் பெருந் தொகையாகவும் பல பேரிடம் கடன் வாங்கியிருந்தான். அதனால் மிகவும் இடர்ப்பட்டான். எப்படியோ முயற்சி செய்து தொழில் நடத்தி வெவ்வேறு யுக்தி செய்து கடனை எல்லாம் அடைத்து விட்டான். அவன் இடர்ப்பட்டபோது பார்த்த நண்பன் வேற்றூர் சென்று பல ஆண்டுகளுக்குப் பின் ஊர் வந்தான்; ''இப்போது எப்படியப்பா இருக்கிறாய்?'' என்று கேட்கிறான். அவன், ''கடனையெல்லாம் தீர்த்து விட்டேன்'' என்று தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்வான். பிறகே கடனினின்றும் விடுதலை அடைவதற்கு முன் நிகழ்ந்தவற்றை ஒவ்வொன்றாக எடுத்துச் சொல்வான்.

இந்தப் பாட்டில் அருணகிரியார் தமக்கு உண்டான இன்பத்தை, தாம் பெற்ற பேற்றை, இவ்வண்ணந்தான் சொல்கிறார். காரணத்தை முதலில் சொல்லிப் பிறகு காரி

யத்தைச் சொல்வது பெரும்பாலான முறை. மகிழ்ச்சி நிறைவில் அந்த முறை மாறும். காரியத்தை அல்லது விளைவை முன்பு சொல்லிப் பிறகு காரணத்தைச் சொல்லத் தோன்றும். ஒரு கோயிலுக்குள் போவதற்கு முன் முதலில் திருவாசலும், பிறகு மகா மண்டபமும், பிறகு அர்த்த மண்டபமும், அப்பால் கர்ப்பக்கிருகமும் தோன்றும். உள்ளே போனவன் திரும்பிப் பார்த்தால் முதலில் கர்ப்பக் கிருகமும், பிறகு அர்த்த மண்டபமும், பின்பு மகாமண்ட பமும், அப்பால் திருவாசலும் தோன்றும். அடையவேண் டிய இடத்தை அடைந்த அருணகிரிநாதர் இப்போது திரும் பிப் பார்த்துச் சொல்கிறார்.

நிகழ்ந்த முறை என்ன? முதலில் விலங்கு போயிற்று; பிறகு சிறை விட்டது; அப்பால் எந்தச் சிறையிலும் வாசம் செய்யாத நிலை வந்தது. இதுதான் நிகழ்ந்த முறை. கூறும் முறையோ ஆனந்தாதிசயப் பெருக்கினால் நேர்மாறாகவே இருக்கிறது. சிறைவாசமே அற்றுப் போனதைச் சொல்லி, அதற்குமுன் இருந்த சிறையை விட்டதை அப்பால் சொல்லி, விலங்கு அறுந்ததைக் கடைசியில் சொல்கிறார்.

**பிறவி அற, இச்சிறை விடுதலைப்பட்டது;**
**விட்டது பாச வினைவிலங்கே.**

பிறவி அற்றது, சிறைவாசம் நிரந்தரமாக நீங்கிய இன்பம்; முடிந்த முடிபு. இச்சிறை விடுதலைப்பட்டது, கடைசி யாக இருந்த சிறையினின்றும் வெளிப்பட்டது. பாச வினை விலங்கு விட்டது என்பதே தளை அற்ற நிலை.

இனிமேல் பிறவாத நிலைதான் மோட்சம்.

"மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே"

என்று மாணிக்கவாசகர் பாடுகிறார். கள்ளப்புலக்குரம்பை என்றது இப்போது நாம் வாழும் உடம்பு. இது போனபிறகு

மறுபடியும் இங்கு வாராத நிலை வரவேண்டும். பிறவிகள் மேலும் மேலும் உண்டாவதற்கு வினையே காரணம். வினை போக, உடல்போக, பிறவி போக வேண்டும். தொண்டர் கூட்டத்தில் முருகன் கூட்டுவித்ததனால் இவை நிகழ்ந்தன.

## வினை நீக்கம்

முதலில் பாசத்தினால் உண்டான வினைகள் ஒழிந்தன. வினைகள் இரண்டு வகையானாலும் வினை என்னும் பொது மையினால் 'விட்டது' என்று ஒருமையாகச் சொன்னார். தொண்டர் கூட்டத்தின் முதல் விளைவு இது.

விட்டது பாச வினைவிலங்கே.

இருவினைகளும் பிறவிக்குக் காரணமாக இருப்பவை. தீவினை இரும்பு விலங்கு போன்றது; நல்வினை பொன்விலங்கு போன்றது. வினையே பாசக் கட்டில் நம்மை இருக்கச் செய்கிறது. பாசமும் விலங்கு; வினையும் விலங்கு. ஒன்றனோடு ஒன்று நெருங்கிய தொடர்புடையது. இருவினை ஒப்பு உண்டானால், உடனே மலபரிபாகம் ஏற்படும். பாசம் என்பதும் மலம் என்பதும் ஒன்றே. பாசத்திற்குட்பட்டுச் செய்யும் வினையாதலின் பாசவினை என்றார்.

"தறுகட் பாசக் கள்ளவினை"

என்பது திருவிளையாடற் புராணம்.

## தேகம் என்னும் சிறை

"வினைப்போகமே ஒரு தேகங்கண் டாய்வினை
தானொழிந்தால்
தினைப்போ தளவும்நில் லாது கண்டாய்"

என்று பட்டினத்தார் கூறுவார். வினைவிலங்கு ஒழிந்தால் தேகம் என்னும் சிறை நில்லாது. வினையென்னும் விலங்கு விட்டதன்பின் நடந்ததைச் சொல்கிறார்.

இச்சிறை விடுதலைப் பட்டது.

இச்சிறை என்றது இந்த உடம்பை. இருவினையின் விளைவாக வருவது இது. காரணமாகிய வினை அற்றபோது காரியமாகிய உடம்பும் அற்றுவிடும்.

"ஏழையின் இரட்டைவினை ஆயதோர் உடற்சிறை
இராமல் விடுவித்தருள் நியாயக்காரனும்"

என்று திருவகுப்பில் இதை விளக்கிச் சொல்லியிருக்கிறார். குற்றம் செய்தவனை இன்ன இன்ன குற்றத்துற்காக இத்தனை காலம் சிறையில் இருக்கவேண்டும் என்று தண்டிக்கிறார்கள். நாம் பாவம், புண்ணியம் என்ற இரண்டு குற்றங்கள் செய்ததனால் இந்த உடம்பாகிய சிறையில் இறைவன் தள்ளியிருக்கிறான்.

உடம்பை உயிர் வாழும் வீடு என்று சொல்லாமல் சிறையென்று சொல்வது பொருந்துமா? வீட்டுக்கும் சிறைக்கும் தோற்றத்தில் பல வகை ஒற்றுமைகள் உண்டு. இரண்டும் கட்டிடங்களே. இரண்டிலும் கதவும் வாசலும் சன்னலும் அறைகளும் சுவர்களும் உண்டு. ஆனால் வீட்டிலே சுதந்தரம் உண்டு. சிறையிலே அது இல்லை. நாம் வேண்டியபோது வீட்டுக்குள் சென்று கதவைச் சாத்திக்கொள்கிறோம். சிறையிலோ குற்றவாளியின் விருப்பத்துக்கு மாறாக அவனை உள்ளே தள்ளி வெளியிலே பூட்டுப் போகிறார்கள்.

"உடம்பில் வாழ்வதும், இதிலிருந்து போவதும் நம்முடைய கையில் இல்லை. அதற்குரிய சுதந்தரம் நம்மிடம் இல்லை. இறைவனே நம் வினைக்கு ஏற்ப உடம்பைத் தருகிறான். வினை ஒழிந்தால் விடுதலை செய்கிறான். அதனால் தான் இதைச் சிறை என்றார். சிறையில் இருப்பவனுக்குத் துன்பந்தான் உண்டாகும். இந்த உடம்பில் வாழ்பவர்களுக்கும் துன்பமே கிடைக்கிறது.

"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்"

என்பது மணிமேகலை.

வினைவிலங்கு விட்டவுடன் இந்த உடம்பாகிய சிறையினின்றும் விடுதலை உண்டாயிற்று.

இச்சிறை விடுதலைப் பட்டது.

பிறவி அறுதல்

இந்தச் சிறை வாழ்வினின்றும் விடுதலை பெறும் பேறு கிடைத்தது. இது தொண்டர் கூட்டத்திற் சார்ந்தமையினால் கிடைத்த இரண்டாவது விளைவு. இந்த உடம்பு போனால் போதுமா? இனி வேறு ஓர் உடம்பிலே புகக் கூடாது. கட்டிப்போட்டிருந்த ஆட்டை அவிழ்த்துவிடுகிறான் ஒருவன். அது விடுதலை பெறுவதாக எண்ணுகிறது. ஆனால் அவிழ்த்துவிட்டவன் அதைக் கசாப்புச் கடைக்கு ஓட்டிச் செல்கிறான். அதை அவிழ்த்துவிட்டபோது அப்போதைக்குக் கொண்ட மகிழ்ச்சியினால் பயன் உண்டோ? அதுபோல இந்த உடம்புச் சிறையினின்றும் விடுதலை கிடைத்தால் மட்டும் போதாது. எப்போதுமே எந்தச் சிறைக்கும் போகாமல் இருக்க வேண்டும். அதுவே இடையீடு படாத பேரின்பம். அடுத்தடுத்துச் சிறை போன்ற உடம்பில் புகுவதைத்தான் பிறவி என்று சொல்கிறோம், இந்த உடம்பாகிய சிறை போனதோடு நிற்கவில்லை; இனி வேறு உடம்புகளில் புகும் பிறவித் துன்பமே அற்று விட்டதாம்.

"பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்"

என்பது மணிமேகலை. அந்தப் பேரின்ப நிலையே முடிந்த முடிபு. அது கிடைத்து விட்டது.

பிறவி அற.

வினைகள் போயின; அதன் பயனாக உடம்பென்னும் சிறை விட்டது; அப்பால் பிறவியே அடியோடு இல்லையாயிற்று. இது காரண காரிய முறை. இதை மாற்றி ஆனந்தத்தினால்

உண்டான வியப்புணர்ச்சியில் மூழ்கிய அருணகிரியார் காரியத்தை முன் வைத்துக் காரணத்தைப் பின்வைத்துக் காரியகாரண முறையில் சொல்கிறார்.

**பிறவி அற, இச்சிறை விடுதலைப் பட்டது;**
**விட்டது பாச வினைவிலங்கே.**

## இலக்கண சமாதானம்

''இந்தப் பாட்டை இந்த உலக வாழ்வில் இருந்து கொண்டே பாடினார் அருணகிரிநாதர். 'உடம்பாகிய சிறை விட்டுவிட்டது' என்று சொல்கிறாரே! அது எப்படிப் பொருந்தும்?'' என்ற ஐயம் இங்கே தோன்றலாம். துணிவு பற்றி எதிர் காலத்தை இறந்த காலத்தில் கூறும் வழக்கு ஒன்று தமிழில் உண்டு. 'அங்கே போனாயோ, தொலைந்தாய்' என்று சொல்வதைக் கேட்டிருக்கிறோம். இது எதிர்காலத்தில் நிகழப்போவது துணிவு என்பதை எண்ணிச் சொல்வது. அப்படி வினைவிலங்கு விடுவதும், உடற் சிறையினின்றும் விடுதலை பெறுவதும், பிறவி அறுவதும் உறுதியானமையால் இப்படிச் சொன்னார் என்று, இலக்கணத்தை ஆதாரமாகக் காட்டிச் சமாதானம் சொல்லிவிடலாம்.

## ஜீவன் முக்தி

இந்த இடத்தில் அப்படிச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. முக்தியின்பத்தை இந்த உடம்போடு வாழும் போதே பெறலாம் என்பது, இந்த நாட்டிலுள்ள பெரியோர்களின் துணிபு. அந்த நிலையை ஜீவன் முக்தி என்று சொல்வார்கள். இந்த உடம்பில் இருந்து வாழ்ந்தாலும் சரீராபிமானம் இல்லாமல் வாழும் நிலை அது. புளியங் காயில் ஒடு வேறு காய் வேறு என்று பிரித்துப் பார்க்க முடியாது. உள்ளே உள்ள பகுதியும் மேற்பகுதியும் இணைந்து ஒட்டியே இருக்கும். காய் பழுத்துப் பழம் ஆனால் ஓட்டுக் குள்ளே பழம் இருந்தாலும் இரண்டுக்கும் ஒட்டுறவு இராது. தேங்காயில் நீர் வற்றி உள்ளே உள்ள பருப்பு

நன்ருகக் காய்ந்து கொப்பரையாகிவிட்டால் ஓட்டுக்கும் அதற்கும் சம்பந்தமே இராது. ஆட்டிப் பார்த்தால் கொப் பரை தனியே குடுகுடுவென்று ஆடும் ஒலி கேட்கும். ஜீவன் முக்தர்கள் இந்த உடம்பில் ஒட்டாமல், இந்திரிய வசப்படாமல், தாமரை இலைத் தண்ணீர்போல் இருப் பார்கள்.

இந்த உடம்பில் இருக்கும்போதே அவர்கள் வினைவிலங்கு தறிக்கப் பெற்றவர்களாய், சரீர அபிமானம் போனவர் களாய், இனிமேல் பிறவியே இல்லாதவர்களாய் விடுகிருர் கள். விடுதலை பெற்றவன் தளை நீங்கித் தன் அறையிலிருந்து புறப்பட்டு வருகிருன். இன்னும் அவன் சிறையின் புறவாசலை அடையவில்லை; சிறைக் கட்டிடத்துக்குள்தான் இருக்கிருன். ஆயினும் அவன் விடுதலை பெற்றவனே. அந்த நிலையில் இருப் பவர்களே ஜீவன் முக்தர்கள்.

### சத்சங்கமும் ஜீவன் முக்தியும்

இறைவன் திருவருளைப் பெற்றவர்கள் அதனுல் விளைந்த பெருவிளைவாக ஜீவன் முக்தி நிலையை அடை வார்கள். அருணகிரிநாதர் சிறந்த ஜீவன்முக்தர். இறைவன் சத்சங்கத்தைச் சேரும்படி தம்மைச் செலுத்தினுன், அதனுல் ஜீவன்முக்தி கிடைத்தது என்று இந்தக் கவியில் சொல்கிருர். இதே கருத்தை ஆதிசங்கரர் பஜகோவிந்தத்தில் அருளியிருக் கிருர்.

"ஸத்ஸங் கத்வே நிஸ்ஸங் கத்வம்
நிஸ்ஸங் கத்வே நிர்மோ ஹத்வம்
நிர்மோ ஹத்வே நிச்சல தத்துவம்
நிச்சல தத்வே ஜீவன் முக்தி"

என்பது அவர் திருவாக்கு. "அன்பர்களின் உறவினுலே தனிமை கிடைக்கும்; அதனுல் மோகம் அற்ற நிலை உண்டா கும்; அதனுல் சலனமற்ற மோன நிலை சித்திக்கும்; அதனுல் ஜீவன்முக்தி கிடைக்கும்" என்பது இதன் கருத்து

சத்சங்கமாகிய தொண்டர் உறவு ஜீவன்முக்தி யென்னும் கனியாகக் கனிந்து நலம் தரும். அருணகிரிநாதரும் தொண்டரிற் கூட்டிய பேரருளினுள் பிறவியறும் நிலை வந்த தென்று சொன்னார்.

## நிறைவு

இந்த நூறாவது பாட்டு எவ்வளவு நிறைவாக அமைந் திருக்கிறது! பிறவி அறுவது என்பதுதான் அந்த நிறைவு. பிரபஞ்சச் சேறு கழிந்ததை முதல் பாட்டில் சொன்ன அருணகிரிநாதர், பிறவிப் பிணி நீங்கிய பேரின்பத்தை இறுதிப் பாட்டில் சொல்லித் தம் மன நிறைவை வெளியிடுகிறார். வேறு எந்த நிறைவும் அப்போதைக்கு நிறைவு போலத் தோன்றிப் பின்பு குறைவுபடும். வயிறு நிறையச் சாப்பிடுகிறோம். ஆனால் சில மணி நேரங்களில் அந்த நிறைவு இருப்பதில்லை. இந்திரிய சுகங்கள் யாவுமே முழுநிறைவை அடைவன அல்ல. இறைவன் குறை விலா நிறைவானவன். அவனோடு ஒன்றுவதே என்றும் குறை யாத, என்றும் மாறாத, நிறைவான வாழ்வு. அதுதான் பரம சுகம்.

> "ஏக போகமாய் நீயும் நானுமாய்
> இறுகும்வகை பரமசுகம் அதனையருள்"

என்பது திருப்புகழ் அந்தப் பரமானந்தநிறைவைச் சொல்லி அருணகிரிநாதர் என்னும் பரமோபகாரி இந்த அற்புதமான நூலை நிறைவு செய்கிறார்.



**இடுதலைச் சற்றும் கருதேனைப்**
**போதம் இலேனைஅன்பால்**
**கெடுதல் இலாத்தொண்ட ரிற்கூட்**
**டியவா! கிரௌஞ்சவெற்பை**

அடுதலைச் சாதித்த வேலோன்;
பிறவி அறஇச்சிறை
விடுதலைப் பட்டது; விட்டது
பாச வினைவிலங்கே.

[கிரௌஞ்ச மலையை அழிக்கும் காரியத்தை நன்கு நிறைவேற்றிய வேலாயுதக் கடவுள், பிறருக்கு ஈவதைச் சிறிதனவேனும் எண்ணாதவனும், அறிவு இல்லாதவனுமாகிய அடியேனை, அன்பினால் யாதொரு கெடுதலும் இல்லாத அன்பர்களிலே ஒருவனாகச் சேர்ப்பித்தது என்ன ஆச்சரியம்! அதனால் பிறவியே அடியோடு அறும்படியாக, இந்த உடம்பாகிய சிறையில் வாழும் வாழ்வு விடுபட்டது; அதற்கு முன் பாசத்தால் அமைந்த இரு வினைகளாகிய விலங்குகளும் நெகிழ்ந்து போயின.

இடுதல் - ஈதல். போதம் - ஞானம்; அறிவு. அன்பு காரணமாகக் கெடுதலே இல்லாமல் செய்து கொண்ட தொண்டர். அன்பால் இலா என்று கூட்டுக. தொண்டரின் - தொண்டரோடு. கூட்டியவா - கூட்டியவாறு என்ன வியப்பு. இறைவன் என்பால் உள்ள அன்பினாலே கூட்டினான் என்ற பொருள் பெறும் வகையில், 'அன்பால் கூட்டியவா' என்றும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். இச்சிறை என்பது உடம்பில் வாழும் வாழ்வை. விடுதலைப்பட்டது - விடுபட்டது, பாசத்தால் அமைந்த வினை. விட்டது: சாதி ஒருமை.

பின்னாலே உண்டான பெரு விளைவுகளை எண்ணும்போது அவற்றுக்குக் காரணமாக அமைந்த நிகழ்ச்சி பெருவியப்பை உண்டாக்கியது.

பிறவி அற: அற என்ற எச்சம் காரியப்பொருட்டு, இச்சிறை விடுதலைப்பட்டது காரணம்; பிறவி அற்றது காரியம்.]

தொண்டர்களின் உறவு ஜீவன்முக்தி நிலைவரையில் நம்மைக் கொண்டு சேர்க்கும் என்பது கருத்து.

இது கந்தர் அலங்காரத்தில் நூறுவது பாட்டு.